"நான் ஆர்க்கிடெக்ட்
அதனால் நான் கட்டும் உடையிலும் கற்பனை இருக்க வேண்டுமே."



உங்கள் அந்தஸ்தே தனி
அதற்கேற்ற துணி

மஃபத்லால்
ஃபேப்ரிக்ஸ்



மஃபத்லால் இண்டஸ்ட்ரீஸ் ... மஃபத்லால் ஃபைன்

MF-311AM



# உன்னைக் கண்டு மயங்காத பேர்களுண்டோ?

ஒரு வெடிகுண்டு வெடிக்கப் போகிறது. திரி கனிந்து கொண்டிருக்கிறது. அந்த நேரம் பார்த்து ஒரு குறும்புக்காரச் சிறுவன் சிறுநீர் கழித்துத் திரியை அணைத்து விடுகிறான். பதின்மூன்றாம் நூற்றாண்டில் பிரஸ்ஸல்ஸ் நகரை விழுங்கத் துடித்த பெரு நெருப்பிலிருந்து நகரம் தப்பிப் பிழைத்தது. —இது ஒரு பிரபலமான கதை.

ஒரு சூனியக்காரனின் வீட்டு வாசலில் ஒரு குறும்புச் சிறுவன் சிறுநீர் கழித்து விடுகிறான். கோபம் கொண்ட அந்த சூனியக்காரன், 'நீ இப்படியே காலமெல்லாம் சிறுநீர் கழித்துக் கொண்டே நின்று கொண்டிரு'— என்று சாபம் கொடுத்து விடுகிறான். யதேச்சையாக அந்தப் பக்கம் வந்த முதியவர் ஒருவர், குழந்தையின் நிலை கண்டு இரக்கப்பட்டு, அவனைப் போலவே ஒரு சிலையை அந்த இடத்தில் நிறுத்திவிட்டு அவனைப் பெற்றவர்களிடம் பத்திரமாய் அழைத்துச் சென்று விடுகிறார் — இது ஒரு கதை.

இப்படி ஏழெட்டுக் கதைகளுக்குக் காரணமாகிவிட்டது இந்த பிரஸ்ஸல்ஸ் நகரத்துக் குழந்தைச் சிலை. (Mannekan Piss) 'மானிக்கன் பிஸ்' என்கிற இந்தப் பிரபலமான வெண்கலச் சிலையின்உயரம் இரண்டடிதான். 362 ஆண்டுகளாய் இப்படி நின்று கொண்டிருக்கிற நிர்வாணச் சிறுவனுக்குப் பெயர் ஜூலியன்.

பெல்ஜியம் நாட்டுக்கு ஆண்டுதோறும் வரும் ஆயிரக் கணக்கான சுற்றுலாப் பயணிகளின் காமிராக் கண்கள் தலைநகர் பிரஸ்ஸல்ஸிலே இந்தக் குறும்புக்காரக் குழந்தை முன் மின்னிப் பளிச்சிடுகின்றன. பிரஸ்ஸல்ஸ் நகரின் அடையாளமாக ஆகிவிட்ட இந்தச் சிலை ஏராளமான 'நைட் ஹுட்' விருதுகளைப் பெற்றுள்ளது! ஸ்விஸ் நாட்டு கௌரவப் பிரஜை என்கிற அந்தஸ்துப் பெற்றுள்ளது. சாரணச் சிறுவன் தகுதிக்கான பதக்கம் வழங்கியிருக்கிறார்கள். பிரஞ்சுப் படையின் உறுப்பினர் தகுதியும் வழங்கப் பட்டிருக்கிறது.

1702ல் ருஷ்ய மாமன்னர் ஜார் பீட்டர் இந்தச் சிறுவன் சிலையைப் பார்க்க வேண்டும் என்று ஆசைப்பட்டு வந்தார். பல ஆண்டுகளுக்குப் பின் பிரபல நடிகர் மாரீஸ் செவாலியரும், சர் வின்ஸ்டன் சர்ச்சிலும் இந்தச் சிறுவனுக்கு முன்னால் நின்று படம் எடுத்துக் கொண்டதுண்டு.

ஜூலியனின் நிர்வாணக் குறும்பு அப்படி சர்வ தேசத்தினரையும் மயக்கி இழுக்கிறது.

பிரஸ்ஸல்ஸ் நகரத் தந்தையர் ஏற்பாட்டின்படி, ஜோரோம் ட்யூக்வெஸ்னாய் என்கிற சிற்பி, நகர மையத்தில் புதிய நீரூற்றுக்காக 1619ல் இந்தச் சிலையை உருவாக்கியதாக அதிகாரபூர்வமான ஆதாரங்கள் சொல்கின்றன.

நமது ஏர் இந்தியாவும் இந்தச் சிலையைச் சும்மா விட்டு வைக்கவில்லை. நகைச் சுவை உணர்வும் கலை 'உணர்வும் ஒன்று கலந்த விதமாக 'மகாராஜா'. விளம்பரத்தில் இடமளித்தார்கள்!

படம் நன்றி: ஏர் இந்தியா
ஆதாரம்: ஹிந்துஸ்தான் டைம்ஸ்
தகவல் : 'யெஸ்பால்'



# “திரைப்படத் தொழிலும்... தொழிற்சங்க அரசியலும்!”

(தென்னிந்திய திரைப்பட டைரக்டர்கள் சங்கத்திலிருந்து நூற்றுக்கு மேற்பட்ட டைரக்டர்கள் விலகித் தனிச்சங்கம் அமைத்திருக்கிறார்கள். அவர்களைத் தொடர்ந்து, ஒளிப்பதிவாளர்கள், தயாரிப்பு நிர்வாகிகள் போன்றவர்களும் விலகி, தற்போது ''தென்னிந்திய திரைப்பட தொழிலாளர் கூட்டமைப்பு'' என்ற ஒன்றை ஆரம்பித்திருக்கிறார்கள். இது பற்றி. தென்னிந்திய திரைப்படத் தொழிலாளர் சம்மேளனத்தின் தலைவர் திரு எம். கே. தருமலிங்கத்தைப் பேட்டி கண்டபோது...)

கேள்வி: டைரக்டர்கள் தங்கள் சுயமரியாதையைக் காப்பாற்றிக் கொள்வதற்குத்தான் தனியாகத் தொழிற்சங்கம் ஆரம்பித்து இருப்பதாய்க் கூறியிருக்கிறார்களே?

பதில்: அவர்களின் சுயமரியாதையைப் பாதிக்கும் அளவுக்கு எங்கள் சம்மேளனத்தின் உறுப்பினர்கள் எந்த நேரத்திலும் நடந்ததில்லை. அப்படி அவர்கள் நடந்து இருப்பார்கள் என்பது ஆதாரத்துடன் நிரூபிக்கப்படுமானால், என் தலைமைப் பதவியை ராஜினாமாச் செய்யத் தயாராக இருக்கிறேன். நான் ஏன் இவ்வளவு தைரியமாக இதைக் கூறுகிறேன் என்றால், எங்கள் உறுப்பினர்களுக்கு ஒழுங்குணர்வை ஊட்டி யிருக்கிறோம். மீறுபவர்களுக்குச் சம்மேளனத்தின் விதிகளின்படி தண்டனை உண்டு என்பது அவர்களுக்குத் தெரியும்.

கே: அப்படி யென்றும் திடீரென்று ஒட்டு மொத்தமாக இவ்வளவு டைரக்டர்கள் ராஜினாமாச் செய்தது ஏன்?

ப: சினிமாத் தொழிலில் நிரந்தரமான வருமானம் கிடையாது. ஒலிப் பதிவாளர்கள் இத்தனை நாள் ஸ்டுடியோ பணியாளர்களாக இருந்தார்கள். சினிமாத் துறையில் உள்ள மற்றவர்களைப் போல அவர்களும் ஃப்ரீ லான்ஸர்களாகப் பணியாற்ற விரும்பினார்கள். மொத்தம் உள்ள 265 ஒலிப் பதிவாளர்களில் 260 பேர் தாங்கள் பணியாற்றும் ஸ்டுடியோக்களிலிருந்து விலகி, தனியாகப் பணியாற்ற ஆரம்பித்தார்கள். ஏ. வி. எம். சரவணன், திரு சிவாஜி கணேசன் போன்றவர்கள் இதை வரவேற்றார்கள். ஆனால் சில டைரக்டர்கள் இதை எதிர்க்க ஆரம்பித்தார்கள். இந்த டைரக்டர்கள், தயாரிப்பாளர்களாகவும் இருப்பவர்கள். 'ஃப்ரிலான்ஸர்களை நாங்கள் வேலைக்கு வைத்துக் கொள்ள மாட்டோம்; அவர்கள் அதிக ஊதியம் கேட்கிறார்கள்' என்று கூறினார்கள். காலை 9 மணியிலிருந்து மாலை 5 மணிவரை வேலை செய்வதற்கு ஒரு ஒலிப்பதிவாளருக்கு ரூ. 70தான் சம்பளம். ஒரு நாளைக்கு என்று பார்க்கும்போது அது அதிகமாகத் தெரியுமே தவிர, அந்த ஒலிப் பதிவாளர், மாதத்தில் எவ்வளவு நாள் வேலை செய்கிறார் என்பதைக் கணக்கெடுத்துப் பார்ப்பீர்களானால், அவர் சம்பாதிப்பது, நிச்சயமாக ரூ. 500 கூட இருக்காது. இந்த டைரக்டர்கள் — தயாரிப்பாளர்கள் விலகிப் போனதற்கு மற்றொரு காரணம் — சம்மேளனம் அதன் தொழிலாளர்களுக்கு, ஒப்பந்தப்படி சேர வேண்டிய தொகையை வாங்கித் தருவதில் உதவி செய்வதுதான். எத்தனையோ தயாரிப்பாளர்கள் எங்கள் தொழிலாளர்களை ஏமாற்றி யிருக்கிறார்கள். ஆனால் எங்கள் சம்மேளனத்தில் புகார் செய்யும் தொழிலாளருக்கு நாங்கள் பொறுப்பேற்றுக்கொண்டு சம்பளத்தைப் பெற்றுத் தருகிறோம். எங்கள் சம்மேளனத்தில் 19000 உறுப்பினர்கள் இருக்கிறார்கள். 23 சங்கங்களை ஒருங்கிணைத்துத்தான் இந்தச் சம்மேளனம் உருவாயிற்று. டைரக்டர்கள் சங்கமும் சம்மேளனத்துடன் இணைக்கப்பட்டதுதான். மொத்தம் உள்ள





○ எம். கே. தருமலிங்கம்.

1070 டைரக்டர்கள், உதவி டைரக்டர்களில், இதுவரை 116 பேர்தான் விலகி யிருக்கிறார்கள். இவர்கள் விலகிப்போய்த் தனியாக ஒரு சங்கத்தை உருவாக்குவதால் எங்களுக்குப் பாதிப்பு இருக்காது. பெரும்பான்மையோர் எங்கள் பக்கம்தான் கட்டுக்கோப்புடன் இருக்கிறார்கள்.

கே: ஒரு படத்தை உருவாக்கும் டைரக்டருக்கு அவர் விருப்பப்படி ஆட்களை வைத்துக்கொள்ளும் உரிமை இல்லையா?

ப: நிச்சயமாக அந்த உரிமை அவர்களுக்கு உண்டு. ஆனால் நாங்கள் கேட்பதெல்லாம், அப்படி ஒரு உறுப்பினர் அல்லாத ஒருவரை நீங்கள் உங்கள் படங்களில் பணியாற்ற அனுமதிக்கும் பட்சத்தில், அவர்களையும் சங்கத்தில் சேர்த்துவிடுங்கள் என்றுதான். பாக்கியராஜ்கூட எத்தனையோ பேர்களைத் தமது ஊரிலிருந்து

கொண்டு வந்தார். ஆனால் அவர்களை யெல்லாம் முறைப்படி சங்கத்தில் சேர்த்த பின்னர்தான் அவருடன் பணியாற்ற வைத்துக் கொண்டார். அப்படி ஒருவர் சங்கத்தில் உறுப்பினர் ஆக மாட்டேன் என்று சொல்வாரேயானால் நாங்கள் சொல்வதெல்லாம் எங்கள் சங்கத்தைச் சேர்ந்தவர்கள் அந்தப் படத்தில் வேலை செய்ய மாட்டார்கள் என்பதுதான். இதில் என்ன தவறு இருக்கிறது? தொழிற் சங்க முறைப்படிதானே நாங்கள் நடந்து கொள்கிறோம்?

கே: சத்யா ஸ்டுடியோவில் டைரக்டர் யோகானந்த் தலைமையில் நடந்து கொண்டிருந்த சிவாஜி கணேசன் படப் பிடிப்பை மிரட்டி நிறுத்தியதோடு மட்டுமல்லாமல், டைரக்டர் யோகானந்தையும் நீங்கள் அவமானப்படுத்தினீர்களாமே!

ப: இது சரியான கட்டுக்கதை. சத்யா ஸ்டுடியோவில், உறுப்பினர் அல்லாத ஒருவரை ஒலிப்பதிவாளராக வைத்துப் படப் பிடிப்பை நடத்திக் கொண்டிருந்தார்கள். இதைக் கேள்விப்பட்ட நாங்கள் சத்யா ஸ்டுடியோவுக்குச் சென்று யோகானந்தை சந்தித்துப் பேச விரும்பினோம். ஆனால், ஸ்டுடியோ அலுவலகத்திலேயே எங்களை உட்கார வைத்து விட்டார்கள். பிறகு சிட்டுக் கொடுத்து அனுப்பினோம். உதவி டைரக்டர்களை அனுப்பி வைத்தார். உறுப்பினர் அல்லாத ஒருவரை வைத்துக் கொண்டு படப்பிடிப்பை நடத்துவதை ஆட்சேபித்து அவர்களிடம் எங்கள் எதிர்ப்பைத் தெரிவித்தோம். மேலும் யோகானந்த் கடந்த ஏழு வருடங்களாகச் சந்தாக் கட்டாமல் இருப்பதையும் ஞாபகப்படுத்தினோம். அவர் மறு நாள் கட்டுவதாகக் கூறி அனுப்பினார். நிலைமை இது தானே தவிர நாங்கள் யோகானந்தை நேரடியாகப் பார்க்கக்கூட இல்லை.

கே: ஏ. எஸ். பிரகாசத்தின் டைரக்ஷனில் உருவாகும் ''எச்சில் இரவுகள்'' படத்தில் நடிகர்கள் ரவீந்தரும், பிரதாப்பும் சாதாரணத் தெருச் சண்டை போடுவது போல் எடுக்கப்படும் ஒரு காட்சிக்குகூட ஸ்டண்ட் மாஸ்டரை வைத்துக் கொள்ள வேண்டும் என்று வற்புறுத்தினீர்களாமே?

ப: அப்படி ஒரு காட்சி அவர்கள் எடுக்கப் போகிறார்கள் என்பது எங்களுக்குத் தெரியாது. தெரிந்தால்தானே பிரகாசம் சொல்வது போல் நாங்கள் வற்புறுத்தி இருக்க முடியும்? இதை நான் வாதத்துக் காகவே சொன்னேன். ஒரு ஸ்டண்ட்காட்சியையோ, பாடல் காட்சியையோ டைரக்டரே அமைப்பாரேயானால் அதைநாங்கள் ஆட்சேபிப்பது இல்லை. உதாரணத்துக்கு இரண்டு சொல்கிறேன்: ''உரிமைக்குரல்'' படத்தில் ஸ்ரீதர் நான்கு பாடல்களுக்கான காட்சிகளை டான்ஸ் டைரக்டர் இல்லாமல் அவரே படமாக்கினார். ''வறுமையின் நிறம் சிவப்பு'' படத்தில் மூன்று சண்டைக் காட்சிகள் ஸ்டண்ட் மாஸ்டர் இல்லாமல் படமாக்கப்பட்டன. இப்படியெல்லாம் நடந்திருக்கும்போது, தெருச் சண்டை காட்சிக்கு ஸ்டண்டு மாஸ்டரைத்தான் போட வேண்டும் என்று எப்படி நாங்கள் வற்புறுத்தியிருப்போம்?

கே: மேக்கப் போடாமல் எடுக்கப்படும் ஒரு படத்துக்கு மேக்கப் மேன் போட்டுத்தான் ஆக வேண்டும் என்று வற்புறுத்தினீர்களா?

ப: மறுபடியும் நீங்கள் ஏ.எஸ். பிரகாசத்தின் குற்றச்சாட்டைத்தான் கூறுகிறீர்கள் என்று நினைக்கிறேன். ''எச்சில் இரவுகள்'' படத்தில் ரூபாவுக்குப் பிச்சைக்காரி வேடம். மேக்கப் இல்லாமல் எப்படி ரூபாவைப் பிச்சைக்காரியாக மாற்ற முடியும்? பிரகாசம் தமது உதவியாளரை வைத்து ரூபாவுக்கு மேக்கப் போட முயன்றபோதுதான் மேக்கப் மேன் சங்கத்தினர் ஆட்சேபனை தெரிவித்தனர். அந்த உதவியாளரே அந்த வேலையைத் தாம் செய்ய முடியாது என்று கூறியபடியால்தான், ஒரு மேக்கப் மேனைப் பணியாற்ற வைத்துக் கொண்டார் பிரகாசம். நாங்கள் யாரையும் வற்புறுத்துவது கிடையாது.

கே: ஸ்டண்ட் யூனியனில் உள்ள ஆட்களை, அடியாட்கள் போல் வைத்துப் படப் பிடிப்பை மிரட்டி நிறுத்துகிறீர்களாமே?

ப: நாங்கள் அப்படி அராஜகத்தில் ஈடுபட்டால் தயாரிப்பாளர் போலீசில் புகார் கொடுத்தால் எங்களைக் கைது செய்ய மாட்டார்களா? யாரையாவது சொல்லச் சொல்லுங்கள் பார்ப்போம் — ஸ்டண்ட் யூனியனில் உள்ளவர்கள் கைது செய்யப்பட்டிருக்கிறார்கள் என்று!

கே: தற்போதைய சூழ்நிலையில் உங்கள் சம்மேளனம் எடுக்கப் போகும் முடிவு என்ன?

ப: அகில இந்திய திரைப்படத் தொழிலாளர்களின் தலைவர் மன்மோகன் கிருஷ்ணா விரைவில் சென்னை வரவிருக்கிறார். அப்போது நாங்கள் கலந்து பேசி ஒரு முடிவு எடுக்க இருக்கிறோம்.

பேட்டி: ப்ரியன்

---

ஒருத்தி: இந்த சர்வதேச உடல் ''ஊனமுற்றவர்கள் ஆண்டுலே'' நீ உருப்படியா ஏதாவது செஞ்சிருக்கியா?

மற்றவள்: ஏன் செய்யாம! காரை என் மாமியார் மேலே இடிச்சி அவங்க கால் ஒடிச்சி இருக்கேனே!

-செ. சீதாராமன்




ராஜீவ் அரசியலில் ஈடுபட மாட்டான்!


அரசியலில் ஈடுபட்டாலும் தேர்தலில் நிற்கமாட்டான்!
நேற்று...


தேர்தலில் வென்றாலும் பதவி ஆசை கிடையாது!


பதவிக்கு வந்தாலும் சர்வாதிகாரி ஆகமாட்டான்!
இன்று...


சர்வாதிகாரி ஆனாலும் ஜனநாயகத்தைக் காப்பாற்றுவனே!


ஜனநாயகத்தைக் காப்பாற்ற முடியா விட்டாலும் சர்வாதிகாரத்தைக் காப்பாற்றி விடுவான்!
நாளை...?


ஹாலிவுட் ஆன் ஐஸ்!
ராவ்
ஜியா
சிம்லா ஒப்பந்தம்


லஞ்ச ஊழல் அராஜகம் என் கண்லே தென்படட்டும்! ஒழிச்சுக் கட்டிப்புடறேன்!

# சிங்களத் தீவினில் ஒரு பாலம் அமைப்போம்!

“**ப**க்கத்து வீட்டுக்காரன் மனைவியைக் கொஞ்சினால் நாம் முகத்தைத் திருப்பிக் கொள்ளலாம்; ஆனால்...

''பக்கத்து வீட்டுக்காரன் மனைவியை அடித்து நொறுக்கினால் நாம் குறுக்கிட்டுச் சமாதானப் படுத்தக் கடமைப்பட்டுள்ளோம்.''

சொன்னவர் பேரறிஞர் அண்ணா. கூறியது ஈழத்தமிழர் நிலை கண்டு. இன்றும் அந்தக் கருத்து பொருந்தும்.

ஈழத்தில் அண்மையில் நடந்தவற்றை அந்நேசத்தின் உள்நாட்டு விவகாரம் என்ற நோக்கில் நாம் ஒதுக்கி விடமுடியாது. அடித்து நொறுக்கப்பட்டது பக்கத்து வீட்டுக்காரன் மனைவி மட்டுமல்ல, நமது சகோதரி — தமிழ்த் தாயின் புதல்வி.

எனவே நமது நெஞ்சம் பதைக்கிறது.

நெருக்கடி நிலைப் பிரகடனத்தைத் தொடர்ந்து ராணுவமும் போலீஸும் செயலில் இறங்க, தமிழர்வாழ் பகுதிகளில் பல உயிர்கள் பலி வாங்கப்பட்டன, வீடுகள் கொளுத்தப்பட்டன. இன்னும் பல கொடுமைகள் இழைக்கப்பட்டன, சட்டத்தைக் காக்க வேண்டியவர்களே சட்டத்தை மறந்தார்கள்.

போலீஸ் அத்துமீறி நடந்து கொண்டதாக ஒப்புக் கொள்ளும் ஈழ அரசு, அதற்குக் காரணமும் கூறுகிறது. 1977 தொடங்கி 19 போலீஸ் அதிகாரிகள் வன்முறையில் நாட்டம் கொண்ட ஈழத் தமிழர்களால் கொல்லப்பட்டிருக்கிறார்கள். இப்போது ஒரு வாய்ப்பு கிடைத்தபோது போலீஸ் பழி வாங்கி விட்டது!

நெருக்கடி நிலைப் பிரகடனம் வாபஸ் பெறப்பட்டு விட்டதாகக் கடைசி செய்தி.

பௌத்த மதத்துக்கு முன்பாகவே ஈழத்தில் சைவம் தழைத்தது; சிங்கள மன்னர்கள் ஆட்சிக்கு முன்பாகவே அங்கு தமிழ் மன்னர்கள் பல பகுதிகளை ஆண்டு வந்திருக்கிறார்கள் என்றெல்லாம் சரித்திரம் பேசிய போதிலும் இன்றைய மாறுபட்ட சூழலில் தமிழருக்கெனத் தனியே சுதந்திர ஈழநாடு என்ற கோரிக்கை — வேண்டவே வேண்டாம்.

அதே நேரத்தில் தமிழ் மொழி, பண்பாடு, என்பதே கூடாது; தமிழர்கள் சிங்களவருடன் இரண்டறக் கலந்து சிங்களவராகவே ஆகி விட வேண்டும் என்ற எதிர்த்தரப்பு தீவிரவாதமும் முறையல்ல.

வாழு, வாழவிடு என்ற அடிப்படையில் இருவருக்கும் சம்மதமான இடைப்பட்ட ஒரு நிலையைக் கண்டு பிடிப்பது சிரமமல்ல; மனம்தான் வேண்டும்.

இருபதுக்கு மேற்பட்ட பிரதான மொழிகளையும் ஏறத்தாழ அதே அளவுக்குத் தனித்தனி கலாச்சாரங்களையும் கொண்ட பாரதம் ஒருமைப்பாட்டுடன் ஒரு தேசமாக விளங்க முடியுமானால் இரு மொழிகளும் இரு பண்பாடுகளும் அருகருகே தழைக்கும் சிறு தீவாக ஈழம் விளங்க முடியாதா என்ன? தேவை: ஒரு நட்புறவுப் பாலம்.

'மயிலே மயிலே என்றால் இறகு போடுமா? ஆட்சியிலிருக்கும் சிங்களவரிடம் என்ன வாதாடியும் பயனில்லை; துப்பாக்கியும் கத்தியும்தான் பேச வேண்டும்' என்று ஈழத் தமிழரில் சிலர் புலிப்படை அமைத்துப் புறப்பட்டிருப்பது நியாயமல்ல. அதே நேரத்தில்....

அந்த நியாயமற்ற போக்கின் பின்னால் உள்ள உணர்ச்சிகளைப் புரிந்து கொள்ள மறுக்கிற சில சிங்களவரின் போக்கும் முறையல்ல. குழந்தையைத் தாலாட்டும்போது கூட, ''ஏண்டா மகனே தமிழனைப்போல் தொல்லை தருகிறாய்? அமைதியாய் உறங்கடா!'' என்றல்லவா இன்றைக்கும் சில சிங்களத் தாய்மார்கள் பாடுகிறார்கள்!

இந்த வெறுப்பு தகிக்கும் சூழலில் நமது தமிழக அரசுக்கும் மத்திய அரசுக்கும் நிரம்ப வேலை இருக்கிறது. நல்லெண்ணத்துடன் உயர் மட்டத்தில் பேச்சு வார்த்தைகள் நடத்துவது மட்டுமல்ல; மக்கள் மட்டத்தில் அமைதிப் பணியாற்ற ஒரு சமாதானப் படையை அனுமதி பெற்று அனுப்புவது நற்பயன் தரும். இக்


1981 ஜூன் 21

துன்மதி ஆனி 7

மலர்: 39 இதழ்: 47





கல்கி




தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

காரியத்துக்கு காந்தி சமாதான நிறுவனம் போன்ற அரசியல் சார்பற்ற அமைப்புக்களை அரசு பயன் படுத்திக் கொள்ளலாம்.

ஈழத் தமிழரின் உடலிலும் உள்ளத்திலும் ரணங்கள் ஆற வேண்டும். இரு தரப்புச் சிந்தனையிலும் ஆரோக்கியம் சிறக்க வேண்டும். நட்புறவுப் பாலமாக பாரதம் விளங்க வேண்டும். மெத்தெனத்தை உதறுமாறு நமது தமிழக — மத்திய அரசுகளை வேண்டுகிறோம்.

---




நமது தேசத்தில் ரயில்கள் தண்டவாளத்தில் ஓடுவதைக் காட்டிலும் வெண்டவாளத்திலேயே அதிகம் ஓடுகின்றன!

நிலக்கரி பற்றாக்குறை காரணமாக நாடெங்கிலும் 267 ரயில்கள் ரத்து செய்யப்பட்டுள்ளன! சிமெண்ட் ஆலைகள், அனல் மின் நிலையங்கள், எஃகு ஆலைகள் இவை ஒருபுறம் நிலக்கரி இன்றித் தவிக்க, இப்போது ரயில்வேக்கு நிலக்கரி சுமந்து வரவே ரயில் வாகன் கிடைக்கவில்லை! அப்படி இருக்கிறது ஆட்சி!

267 ரயில்கள் ரத்தானால் அதில் நாள் தோறும் பயணப்பட்டு வந்த எத்தனை ஆயிரம் மக்கள் தவித்துக் கொண்டிருப்பார்கள் என்ற சிந்தனை ஏதுமின்றி ரயில்வே அமைச்சர் விசாத புயலை வீசியதாக நிரூபிப்பதிலேயே கருத்தா யிருக்கிறார்!

• • •

டைகர் புயல் காரணமாகத்தான் பாக்மதி பாலத்திலிருந்து ரயில் நதியில் தூக்கி எறியப்பட்டு விட்டதாம். தேசத்தில் உள்ள எந்த ஆராய்ச்சி நிலையத்துக்கும் புலப்படாத அந்தப் பொல்லாத புயலை எப்படியாவது கண்டு பிடித்தே தீருவது என்று தீர்மானித்திருக்கிறார்கள், ரயில்வே அமைச்சர் கேதார் பாண்டேயும், ரயில்வே போர்டு தலைவர் குஜ்ராலும். "சி.பி.ஐ.யால் கண்டுபிடிக்க முடியாமல் போனால், கே. ஜி. பி., சி. ஐ.ஏ. முதலியவற்றை அழைக்கட்டும். அவர்களாலும் முடியவில்லை எனில் பிறகு என்னிடம் வரட்டும்" என்கிறான் வஸந்த்!

• • •

விபத்திலே இறந்தவர்கள் எண்ணிக்கை இரண்டாயிரம் முதல் மூவாயிரம் வரை இருக்கும் என்று எல்லாப் பத்திரிகைகளும் கூற, குஜ்ராலும் பாண்டேயும் இருநூறு முதல் முந்நூறுவரைதான் இருக்கும் என்று கணக்குப் போட்டுக் கூறிக் கொண்டிருக்கிறார்கள். ரொம்பவும் குடைந்து கேட்டால் "ஆண்டவனுக்குத்தான் வெளிச்சம்" என்கிறார் குஜ்ரால். ஆண்டவனுக்குத்தான் தெரியும் என்று கூற ஒரு ரயில்வேபோர்டு தலைவர் தேவையா? ஆ! ஆண்டவனே!

ராஜிநாமா செய்யுமாறு எழுப்பப்படும் கோஷத்தை இருவரும் காதில் போட்டுக் கொள்ளவே இல்லை. ரயில் வெண்டவாளத்தில் ஓடும்போது எழும் சத்தத்தில் வேறு எதுவுமே காதில் விழாது!

• • •

ஈராக்கில் நிறுவப்பட்டு வரும் அணு நிலையங்களைக் குண்டு வீசித் தாக்கி அழிப்பதில் இஸ்ரேல் அபாரமான சாகசத்தைக் காட்டியுள்ளது. எதிரி விமானங்கள் வருவதைக் கண்டுபிடிக்கவென்றே நிறுவப்பட்டுள்ள மிக நவீன சாதனங்களை ஏமாற்றிவிட்டு இஸ்ரேல் விமானங்கள் பாய்ந்து சென்று பணியை முடித்துவிட்டுப் பத்திரமாகத் திரும்பியுள்ளன. இந்த மின்னல் தாக்குதலின் பின்னால் உள்ள நுண் ஆற்றலையும் ராணுவ தந்திரத்தையும் கண்டு வியக்கலாம், பாராட்ட முடியாது.

ஈராக் நிறுவும் அணு நிலையங்கள் மின்சாரம் மட்டுமின்றி அணு குண்டுகளையும் தயாரிக்கலாம் என்றும் இவை இஸ்ரேலுக்கு எதிராகப் பயன்படுத்தப்படலாம் என்றும் இஸ்ரேல் நம்புவதே இந்த மின்னல் தாக்குதலுக்குக் காரணம்.

"ஈராக்குக்கு அணு குண்டு தயாரிக்கும் எண்ணமும் இல்லை, ஆற்றலும் இல்லை" என்று சர்வதேச அணு சக்தி ஏஜென்ஸி திட்டவட்டமாகக் கூறியுள்ளபோது இஸ்ரேலின் செயல் தற்காப்பாக அன்றி ஆக்கிரமிப்பாகிறது. "தேவையானால் மீண்டும் தாக்குவோம்" என்ற இஸ்ரேல் பிரதமரின் பேச்சு ஆணவத்தின் உச்சநிலை.

இஸ்ரேலின் இந்தத் தாக்குதலுக்கு அமெரிக்க விமானங்களும் ஆயுதங்களும் பயன்பட்டிருக்கின்றன. இஸ்ரேலோ அல்லது பாகிஸ்தானோ அல்லது வேறு தேசமோ எதுவானாலும் சரி, அமெரிக்கா தற்காப்புக்கு என்று கூறி வழங்கும் ஆயுதங்கள் ஆக்கிரமிப்புக்கும் பயனாகலாம் என்பது மீண்டும் ஒரு முறை நிரூபணமாகியிருக்கிறது.

அணு ஆயுதங்கள் பரவுதலைத் தடுக்கும் சர்வதேச ஒப்பந்தத்தில் கையெழுத்திட மறுக்கும் இஸ்ரேல், அணு குண்டை ஈராக் தயாரித்துவிடும் என்று கருதித் தாக்குதல் நடத்துவது, போலீஸ் உடுப்பில் இருக்கும் கள்ளனையே நினைவூட்டுகிறது!

பாகிஸ்தான் ஈராக் போன்ற முஸ்லிம் நாடுகளில் ஏதேனும் ஒன்று சீக்கிரமே அணு குண்டு தயாரிக்க வேண்டும் என்ற கருத்துக்கு வேகம் அளிப்பதாகவே இச்சம்பவம் முடியும்.

கல்கி

5-7-'81 இதழில்

வாஸந்தி

எழுதும்

# அந்தி நேரத்து உதயங்கள்

புதிய தொடர்கதை ஆரம்பம்

# சுவர்ணமுகி

ஸ்ரீவேணுகோபாலன்

## முன்கதை

சுவர்ணமுகி திருப்பதி போய்விட்டு வரும்போது அவளது வளர்ப்புத் தந்தை ரங்கப்பா போரில் இறந்தார் என்று செய்தி வருகிறது.

செய்தியைக் கொண்டுவந்த அர்ச்சுனன் அவளை எச்சரித்துவிட்டு, பிறே மரண அவஸ்தையில் விழுகிறான். போர்க்களத்தில் நிறையக் காயம் பட்டிருந்தான் அவன்.

சுவர்ணமுகி நேராக நாராயண வனத்து வீட்டுக்குப் போக, அங்கே ரங்கப்பாவின் மனைவியும் மக்களும் கொலை செய்யப்பட்டுக் கிடப்பதைப் பார்க்கிறாள்.

வீட்டில் ஒளிந்திருந்த நரசய்யா என்கிற பிரதானி சுவர்ணமுகியைப் பிடித்து 'விஜயநகரப் பொக்கிஷம் எங்கே?' என்று கேட்கிறான். அவளை உள்ளே அழைத்துப் போகும் சுவர்ணமுகி, ஒரு தந்திரத்தில் அவனை விட்டுத் தப்பி விடுகிறாள்.

இரவெல்லாம் நடந்து நாகலாபுரத்தை அடைகிறாள். தனது சிநேகிதி திருமலாம்பா வீட்டுக்குச் சரண் போகிறாள். ஆனால் திருமலாம்பாவின் கணவன் நாராயண ராஜு சுவர்ணமுகியையும் தனது ஒரு மகளையும் வான் கோயன் என்ற ஒலாந்தியனுக்கு (டச்சுக்காரன்) விற்று விடுகிறான். நாடெங்கும் பஞ்சம். ஜனங்களுக்கு உணவு இல்லை. அவர்கள் தங்கள் குழந்தைகளை வெள்ளைக்காரர்களுக்கு அடிமைகளாக விற்கிறார்கள். இந்த விவரம் எல்லாம் சுவர்ணமுகிக்குத் தெரிய, ஆச்சரியமும் அதிர்ச்சியும் அடைகிறாள்.

வான் கோயன் அவளை ஸாந்தோமே (ஸாந்தோம்) கடற்கரை நகருக்குக் கொண்டுபோய் கப்பலில் ஏற்ற முயலும்போது ஃபிரான்சிஸ் டே என்னும் வெள்ளைக்காரன் அவளைப் பார்க்கிறான். இங்கிலாந்து திரும்பிக் கொண்டிருந்த ட்ரேக் ராஜர் என்ற இளைஞனும் பார்க்கிறான். இருவரும் சுவர்ணமுகியை வாங்குவதற்குப் போட்டி போடுகிறார்கள். இதற்காக ட்யூயல் நடத்த ராஜர் காயமடைகிறான். சுவர்ணமுகி அவன் பாதுகாப்புக்கு வருகிறாள்.

ராஜர் குணமாகி அவளை வெங்கடகிரிக்கு அழைத்துச் செல்லும் பாதையில் இருவரும் பஞ்சக் காட்சிகளைப் பார்க்கிறார்கள்.

இதற்கிடையில் அர்ச்சுனன் என்ற வீரன் சிலர் உதவியால் குணமாகி எழுந்ததும் அவனது நண்பன் தோதா என்பவன் அவனுக்குத் துரோகம் செய்துவிட்டு எதிரிகளோடு உறவாடி விட்டதை அறிந்து வெகுவாகத் துடிக்கிறான்.

சுவர்ணமுகியைத் தோதாவின் வஞ்சகத்திலிருந்து காப்பாற்ற வேண்டும் என்று அவளைத் தேடிப் புறப்படுகிறான்.

தோதா என்பவன் எதிரிகளின் பிரதானி நரசய்யா வைச் சந்திக்கிறான்.

இனி அடுத்த அத்தியாயத்தைத் தொடர்ந்து படிக்கலாம்.

The Minds of Devadasis are developed by the best education and showed a marvellous aptitude for understanding the truths of religion

-VICO (1632 A D)

## 12

உள்ளே வந்தவன் ஒரு மிடுக்கான இளைஞன். கண்களில் சோர்வு தேங்க, எங்கிருந்தோ வந்திருந்தான் அவசரமாக.

''இவர்தான் தோதாத்ரி நாதன். தோதான்னு சொல்லுவாங்க!'' என்று அறிமுகம் செய்தாள் ரத்தினவள்ளி.

அந்த அறிமுகம் ஒரு மாய வேலை செய்தது. நரசய்யா தமது இருக்கையை விட்டுப் படக்கென்று எழுந்தார். இளைஞனின் கையை இறுகப் பற்றி அவனை மகிழ்ச்சியுடன் ஓர் ஆசனத்தில் உட்கார வைத்தார்.

''தோதா! உன்னைப் பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறேன். பார்த்ததில்லை. நீ எங்களுக்குச் செய்த உதவி மகத்தானது. அதற்காக நாங்கள் நிச்சயம் கடமைப்பட்டிருக்கிறோம். இப்போது என்ன செய்தி கொண்டு வந்திருக்கிறாய்?'' என்று கேட்டார்.

தோதா உச்சி குளிர்ந்திருந்தான். ரத்னவள்ளியை நன்றியோடு பார்த்தான்.

''பிரதானி! ஒரு முக்கியமான செய்தி.''

''சொல்லு!''

''ராஜா ஸ்ரீரங்கரைச் சிறையில் அடைத்து அவரையும் அவர் குடும்பத்தையும் கொன்றது நினைவிருக்கிறதா?''

''ஆமாம்.''

''அப்போது அவரது ஒரு மகன் தப்பித்து விட்டது நினைவிருக்கிறதா?''

''இருக்கிறது.''

''அவரது ஒரு மகளும் தப்பித்துவிட்டாள் என்று இப்போது தெரிய வந்திருக்கிறது.''



''மகள்?'' என்று திடுக்கிட்டுக் கேட்டார் நரசய்யா. ''ஸ்ரீரங்கனின் மகனைத்தான் கொன்று விட்டார்களே!''

''கொல்லவில்லை. சிறைக் காவலாளி அவனைக் காப்பாற்றி யிருக்கிறான். அவனுக்காகத் தன் சொந்த மகனையே காவு கொடுத்தானும்!''

''பலே!'' என்று பல்லைக் கடித்தார்.

சிறிது நேரம் உள்ளே கொதித்துவிட்டு, ''உனக்கு எப்படித் தெரிந்தது?'' என்றார் அவர்.

''நான் உளவாளியாகப் போனேன்.''

''யார் அனுப்பியது உன்னை?''

''திம்மராஜா!''

''ஓ!'' என்று சொல்லி மனத்துக்குள் எத்தனையோ எண்ணங்களை அசைபோட்டார்.

''சரி. விஷயத்தைச் சொல். அந்தப் பெண் யார், எங்கே இருக்கிறாள்?''

''அவள் பெயர் சுவர்ணமுகி. அவளை ரங்கப்பாதான் தன் மகள் போல் வளர்த்து வந்தார்.''

''ரங்கப்பரா!'' என்று ஒரு ஏளன நகைப்புக் கொடுத்தார் நரசய்யா. ''அவரது குடும்பத்தைத்தான் நான் நிர்மூலமாக்கி விட்டேனே!''

''எல்லோரையுமா?'' என்று ஆர்வமுடன் தோதா கேட்டான்.

நரசய்யா சிரிப்பைப் பக்கென்று நிறுத்தினார். ''ரங்கப்பனுக்கு எத்தனை மகள்கள்?''

''இரண்டு மகள்கள் என்று சொல்லுவார்கள். ஆனால் ஒருத்தி உண்மையில் ஸ்ரீரங்கனின் மகள்! சுவர்ணமுகி! அவளது வரலாற்றை வெளியே தெரியாமல் வளர்க்கிறார்கள்.''

''தோதா! ஒரு விஷயம்! ரங்கப்பர் வீட்டில் நான் அவர் மனைவி, ஒரு மகள், ஒரு மகன் மூவரையும் கொலை செய்தேன். இரண்டாவது மகள் உண்டு என்று கேள்விப் பட்டேன். அவள் அப்போது வீட்டில் இல்லை. அவள் வரும் வரை காத்திருந்தேன். இருட்டும் நேரத்தில் வந்தாள்...''

''அவளைக் கொன்று விட்டீர்களா?''

''என் துரதிர்ஷ்டம் அதைத்தான் செய்யவில்லை. [illegible] அந்த விஜயநகர பொக்கிஷத்தை அவளோடு தேடினேன். ஒரு இடத்தில் நான் இடறி விழப் பார்த்து அவள் தப்பி ஓடிவிட்டாள்.''

''எங்கே ஓடினாள்?''

''பின்புறத்தில், அருணை ஆற்றுப் பக்கம்! நான் தேடு தேடு என்று தேடினேன். கிடைக்கவில்லை.''

தோதா சோர்ந்து போனான். அவன் கண்களில் அதுவரை இருந்த பொறிகள் எல்லாம் அவிந்து விட்டன.

திடீரென்று ஒரு விளக்கு கூம்பியது போலிருந்தது.

''பெரிய துரதிர்ஷ்டம்!'' என்று கருதி இறங்கிச் சொன்னான் தோதா! ''பிரதானி அவர்களே! உடனே இப்போது அவளைத் தேட வேண்டும். அவளை விட்டு வைத்தால் திம்மராஜாவுக்கு ஆபத்து. நம் எல்லோருக்கும் ஆபத்து. தவிர இன்னொரு முக்கிய விஷயம்.''

''சொல்லு!''

''அந்தப் பொண்ணுக்கு விஜயநகரப் பொக்கிஷம் இருக்கும் இடம் தெரியும்.''

''அப்படியா?'' என்று அதிர்ச்சியுடன் கேட்டார் நரசய்யா.

''ஆமாம்! அதனால்தான் அவளை அவசரமுடன் தேடிப் போய்க் கொண்டிருக்கிறேன். திம்மராஜாவைக்கூடப் பார்க்க எனக்கு நேரமில்லை. தங்களிடம் சொல்லிவிட்டு உடனே ஸாந்தோமே போகப் போகிறேன்.''

''அங்கே ஏன் போகிறாய்?''

''சுவர்ணமுகியை ஒரு போர்த்துகீசிய வியாபாரியுடன் பார்த்ததாக நாகலாபுரத்தில் ஒரு தறிக்காரர் கூறினார்.''

''அவருக்குச் சுவர்ணமுகியைத் தெரியுமா?''

''சுவர்ணமுகி என்று தெரியாது. ரங்கப்







இந்த வார டி.வி. வெளியீடு.

## காலங்களில் அவள் வசந்தம்

'இந்தப் படத்தின் தயாரிப்பாளர் விஜய பாஸ்கர், படம் 9-2-77ல் திரையிடப்பட்டதாகக் கூறிப் பல புகைப்படங்களும் கொடுத்து உதவினார்.

இந்தத் தேதியை யொட்டிய பல பத்திரிகைகளைப் புரட்டிப் பார்த்தும் விமர்சனம் ஏதும் அகப்படவில்லை.

படத்தில் முத்துராமன், ஸ்ரீவித்யா, சந்திரகலா, தேங்காய், மனோரமா முதலியோர் நடித்துள்ளனர். டைரக்ஷன் எஸ். பி. முத்துராமன்.

படம் ஐம்பது நாள் ஓடியதாக விஜய பாஸ்கர் கூறுகிறார்.

—சித்தி



பரின் மகள் என்று தெரியும். அவள் நாகலாபுரத்தில் நாராயண ராஜா'' என்பவர் வீட்டுக்கு அடிக்கடி வருவது வழக்கமாம். அந்தத் தறிக்காரர்பார்த்திருக்கிறார். அவர் கொடுத்த சேதி பேரில் தெற்கே போகிறேன்!''

''நல்லது! உடனே அவளைக் கண்டுபிடி. கொன்றுவிடாதே! பின்னால் நம் காரியங்களுக்கு அவள் நிறையத்தேவைப்படுவாள்.''

''உத்தரவு பிரபு!''

''உனக்கு ஏதாவது உதவி வேண்டுமா?''

''குதிரைகளும், சில வீரர்களும் தேவை.''

''நல்லது. நான் அனுப்பி வைக்கிறேன். எப்படியாவது அவளை மீட்டு வந்துவிடு. அவளை வைத்துப் பெரிய வேலைகளில் இறங்குவோம்'' என்று சொல்லி, தமது பொக்கிஷக்காரரை அழைக்க ஆள் அனுப்பினார்.

சுவர்ணமுகி வழியில் எத்தனை காட்சிகளைப் பார்த்துவிட்டாள்?

எத்தனை கோரங்களை மனத்தினுள் சகித்துவிட்டாள்?

வெளியே உலகைப் பார்த்தால் மக்கள் படும் அவஸ்தை எவ்வளவு தெரிகிறது!

அம்மம்மா! என்ன கொடுமை! என்ன பஞ்சம்!

வயல்களிலும், வெளிகளிலும் தோப்புகளிலும் வீடுகளிலும் மனித உடல்கள்.

இளைத்துத் துரும்பாகப் போன உடல்கள்! சதை எதுவும் தெரியாமல் எலும்புப் பின்னலாக இருந்த உடல்கள். வயிறு எக்கிப் பின்புறத்துடன் ஒட்டிய உடல்கள்! நா வெளி நீட்டிய உடல்கள்! கழுகுகள் கொத்திய உடல்கள்! பாதி இறந்து கொண்டிருக்கும் உடல்கள். பாதியும் பிணமாக நடக்கும் உடல்கள்.

கிராமங்கள் நிர்மூலமாகக் கிடந்தன. ஜனங்கள் மறைந்துபோன இடம் தெரியவில்லை. வீடுகள் ஜீவனற்ற கூடுகளாக இருந்தன. பசுக்களோ, மாடுகளோ வேறு பிராணிகளோ தென்படவில்லை. வயல்களில் நீ—பாய்ந்தது. பூமி கிளை கிளைகளாக வெடித்து நெடுகிலும் பின்னமிட்டிருந்தது.

ஆகாயத்தைப் பார்த்தால் வெறும் சூயம் உருக்காக ஜொலித்தது.

காற்றில் பிண வாடை வீசியது. பூமி எங்கும் ஆவிகள் பறக்க, அசப்பில் அவை வேதாள ஆவிகளாகத் தோன்றின.

சுவர்ணமுகியின் கோஷ்டி மிக மெதுவாகவே செல்ல வேண்டி வந்தது.

போதுமான தண்ணீர் எங்கும் கிடைக்கவில்லை. ராஜூர் இதற்காகத் தண்ணீர்த் துருத்திகளுக்கு ஏற்பாடு செய்திருந்தான். எங்கேயாவது துர்லபமாகத் தண்ணீர் கிடைத்தால் ராஜூர் அதை உடனே உபயோகப் படுத்தவில்லை. தான் கொண்டு போயிருந்த கோழிக்குச் சிறிது கொடுத்து அதில் விஷம் ஏதும் இல்லை என்று தெரிந்த பிறகே அதை உபயோகத்துக்கு எடுத்துக் கொண்டான்.

போகிகள் மிகவும் தள்ளாடி நடந்தார்கள்.

பூமியில் பசுமை இல்லாவிட்டால் அது அவர்கள் கண்களையும் சுவாசத்தையும் பாதித்தது. ராஜூர் இதை அறிந்து கொண்டு காலையும் மாலையும் மட்டுமே பிரயாணத்தை



# ரயிலை கவிழ்த்தது புயலா?

## ஒரு கேள்வி, ஒரு பதில்!

கேள்வி: பீகாரில் நடந்த ரயில் விபத்துக்குக் காரணம் புயல்தான் என்கிறார் ரயில்வே மந்திரி. ஆனால் விபத்து நடந்த இடத்திலோ ஒரு மரம் கூட விழவில்லை; குடிசைகள் பறக்கவில்லை. வானிலை ஆராய்ச்சி அதிகாரிகள் அப்படி ஒரு புயலே அந்த இடத்தில் வீசவில்லை என்கிறார்கள். அப்படியென்றால் மந்திரி சொல்வது...? வானிலை அதிகாரிகளுக்குத் தெரிய வராதபடி புயல் வீசக்கூடிய வாய்ப்பு இருக்கிறதா?

தங்கள் பெயரையும் புகைப்படத்தையும் வெளியிட விரும்பாத சில வானிலை ஆராய்ச்சி அதிகாரிகள் சொன்ன பதில்:

வானிலை ஆராய்ச்சியில் நாம் மிகவும் முன்னேறிய நிலையில் இருக்கிறோம். அமெரிக்கச் செயற்கைக் கோளிலிருந்து தினமும், வானிலை பற்றிய படங்கள் வருகின்றன. அதை வைத்துக்கொண்டு இந்தியாவில் எந்த இடத்திலும் புயலடிக்கப் போவதையோ, மழை பெய்யப் போவதையோ தெளிவாகச் சொல்லிவிடலாம். பீகாரில் புயல் அடிக்கப் போகிறதென்றால் சென்னையிலிருந்தே கூறி விடலாம். விபத்து நடந்த இடத்திலிருந்து 60 கிலோ மீட்டர் தள்ளித்தான் வானிலை ஆராய்ச்சி நிலையம் உள்ளது என்கிறார் ரயில்வே போர்டு தலைவர் குஜ்ரால். சென்னையிலிருந்தே சொல்ல முடியும் என்றால் 60 கிலோ மீட்டர் தூரத்திலுள்ள வானிலை ஆராய்ச்சி அதிகாரிகள் சொல்ல முடியாதா? அதுவும் கிட்டத்தட்ட 3000 பேரைச் சுமந்து கொண்டு சென்ற ரயிலைக் கவிழ்க்க எப்பேர்ப்பட்ட புயல் அடித்திருக்க வேண்டும்! மந்திரி எதை வைத்து புயல் அடித்தது என்று சொல்கிறார் என்பது தெரியவில்லை. எங்களைப் பொறுத்தமட்டில் நிச்சயமாகக் கூறுவோம்: ''விபத்து நடந்த இடத்தில் புயலே வீசவில்லை!''

- ப்ரியன்

நடத்துவதில் ஈடுபட்டான். மற்ற நேரங்களில் தனது கோஷ்டியை நிழல்களில் இளைப்பாற வைத்தான்.

இரண்டாம் நாள் இரவு.

பூமி திடீரென மௌனமாகி விட்டது போல் அந்தி சூழ்ந்து விட்டது.

அவர்கள் ஒரு பெரிய காரைச் சத்திரத்தில் தங்கி யிருந்தார்கள்.

ராஜர் ஒரு விளக்குடன் உள்ளே ஒவ்வொரு பகுதியையும் சுற்றி வந்தான்.

விஷ ஜந்துக்கள் ஏதாவது இருக்குமா என்று பரிசோதித்துக் கொண்டிருந்தான்.

அவனைப் பார்க்கப் பார்க்கச் சுவர்ண முகிக்கு ஆச்சரியமாக இருந்தது.

இவ்வளவு பொறுப்பாக ஒரு யாத்திரையை நடத்தி, இவ்வளவு கவனமாக அவளை வெங்கடகிரிக்கு அழைத்துச் செல்கிறானே!

இந்த வெள்ளைக்காரர்களை வெறும் கேவலமாக நினைத்தோமே, இவர்கள் என்ன உன்னதமாக நடந்து கொள்கிறார்கள்!

ராஜர் அதோடு நிற்கவில்லை. சுற்று வட்டாரங்களையும் ஒரு பார்வை பார்த்துவிட்டு உள்ளே வந்தான்.

சத்திரத்தில் யாராவது சமையல் பண்ணியே ஆண்டுகள் ஆகியிருக்கும் போல இருந்தது. மெள்ள இப்போது இரவுச் சமையலில் சோற்று நெடி ஆரோக்கியமாக உள்ளே பரவியது.

ராஜர் உள்ளே வந்ததும், ''நாளைக் காலையில் கிழக்குத் தொடர் மலையை நெருங்கி விடுவோம். உஷ்ணம் தணிந்து விடும். விறகுக்குப் பஞ்சம் இருக்காது'' என்றான்.

கிழக்குத் தொடர் என்ற வார்த்தை அவளுக்கு ஆச்சரியமாக இருந்தது. ''அது என்ன கிழக்குத் தொடர்?'' என்றாள்.

ராஜர் தனது கித்தான் பையிலிருந்து இரண்டு வரை படச் சுருளை உருவினான். கீழே இந்தியத் துணைக் கண்டத்தைப் பரப்பினான். விளக்கைக் கையில் ஏந்த, அந்த -- குறுக்கு நெடுக்குக் கோடுகள் உள்ள வரை படம் அவளுக்கு விநோதமாகத் தோன்றியது.

''இதைப் பார்த்தீங்களா? இதுதான் கிழக்குத் தொடர் மலை. நாங்கள் கொடுத்த பெயர். இதோ இது வங்காள குடாக் கடல். இது வேங்கடகிரி. இது திருப்பதி. இது இப்போ நாம் இருக்கும் இடம்'' என்று சொல்லிக்கொண்டே போக சுவர்ணமுகியின் கண்கள் விரிந்து கொண்டே போயின.

இடை இடையே சந்தேகத்துக்குச் சில கேள்விகள் கேட்டாள். ராஜர் விவரங்களை அழகாகக் கூறினான்.

பிறகு ராஜர் உலகப் படத்தை எடுத்து விரித்தான்.

தான் இருக்கும் இங்கிலாந்தைக் காட்டினான். ''இங்கே கப்பல் ஏறி இப்படிச் சுற்றி இங்கே வந்தேன்'' என்று ஆப்பிரிக்கா முழுதையும் சுற்றிக் காண்பித்தான் அவன்.

''அம்மா! அவ்வளவு தூரமா? எத்தனை நாள் பிரயாணம்?''

''ஏழு மாதம்! கப்பல்லே!''

''பயமா இல்லையா?''

''பயந்தான். நிரந்தரப் பயம். எந்த நேரத்தில் என்ன நடக்குமோ தெரியாது.

புயல், சூறாவளி, மழை எதுவும் வந்து தாக்கும். கப்பல் சின்னாபின்னமாயிடும்.''

''ஓ! அப்போ என்ன செய்வீங்க?''

''இறக்க வேண்டியதுதான். நானே நாகப்பட்டினம் புயல்லே தப்பிச்சவன். அதுமட்டுமில்லே. நோய் நொடியிலே நூத்துக்கு இருபது பேர் கப்பல்லே செத்துடுவாங்க.''

''என்ன நோய்?''

''பயங்கரம். 'ஸ்கர்வி'னு நோய். பல் தானாக உதிரும். உடம்பு இற்றுப்போயிடும்.''

சொல்லச் சொல்ல சுவர்ணமுகிக்குப் பல விதத் தோற்றங்கள் மனத்தில் வந்தன. உடம்பில் சிலிர்ப்பு ஏற்பட்டது.

''ஆமா, இப்படிக் கஷ்டப்பட்டு ஏன் வருகிறீர்கள்?''

''வியாபாரம்.''

''என்ன வியாபாரம்?''

''முதல்லே உங்க தேசத்துக்கு நாங்கள் வந்ததற்குக் காரணம், மிளகு, கிராம்பு, ஏலக்காய் வாங்கிக்கிட்டுப் போகத்தான்.''

''அதுக்காகவா வந்தீங்க! உங்க ஊரிலேயே அது கிடையாதா?''

''கிடையாது. குளிர் காலத்திலே எதுவும் கிடைக்காததனாலே மாமிசத்தைப் பாடம் பண்ணி வச்சிருப்போம். அவை வாயிலே வைக்கச் சகிக்காது. நாற்றம் வேறே! இப்போத்தான் உங்கள் மிளகு, ஏலக்காய்னோட அருமை எங்களுக்குத் தெரிந்தது. மிளகைப் பொடி பண்ணித் தூவி ஏலக்காய் மாதிரி வாசனைக் காய்களைத் தூவி விட்டுட்டா மாமிசத்தை எங்களாலே ஓரளவு புசிக்க முடிஞ்சுது. அதனாலே இந்த வாசனைச் சாமான்களுக்கு ரொம்பக் கிராக்கி.

''முதல்லே பணக்காரங்தான் இதை உபயோகிச்சாங்க!

''ஆனால் ஏழைகளுக்கும் வேணும் என்கிற எண்ணத்திலே வியாபாரிங்க முனைந்து பெருவாரியா உங்க நாட்டிலேர்ந்து இதைக் கொண்டு வர விரும்பினாங்க.

''அதனாலே ஏற்பட்ட போட்டா போட்டியிலேதான் நானும் உங்க ஊர் வந்திருக்கேன்.'' என்றான்.

''இங்கிருந்து இதுங்களை வாங்கிப்போய் உங்க ஊர்லே கொள்ளை விலைக்கு விற்கிறீங்களா?''

''ஆமா!''

''அப்புறம் துணி வேறே இங்கேயிருந்து வாங்கிக்கிட்டுப் போறீங்களே?'' என்றாள் சுவர்ணமுகி.

''அது முதல்லே! எங்கிட்டே உரோம ஆடைகள் உண்டு. பருத்தி ஆடைகள் கிடையாது. உரோம ஆடைகளை நாங்கள் தண்ணியிலே நனைச்சுத் துவைத்துப் போட்டுக்க முடியாது. பருத்தி ஆடைகளை முடியும். அதனாலே உங்க ஊர்த் துணிகளையும் தேடி வந்தோம். இதுக்கும் எங்க ஊரிலே கிராக்கி....''

என்று சொன்ன ராஜர், திறந்திருந்த சன்னல் கதவின் வழியே தூரத்தில் சில பேர்த்திகளைப் பார்த்துவிட்டுத் திடுக்கிட்டு எழுந்தான்.

''ராபர்ட்!'' என்றான். ஒரு இந்திய வீரன் ஓடி வந்தான்.

''யார் வருகிறார்கள் கவனி! எல்லோரையும் தயார் செய்!'' என்றான்.

ராஜர் உடனே வெளியே சென்றான்.

சென்ற அரை மணிக்குள் திரும்பி வந்த போது அவன் தோதாவுடன் மீண்டும் அந்தச் சத்திரத்தினுள் நுழைந்தான்.

''தோதா! நல்லவேளை உங்களைப் பார்த்ததில் ரொம்பச் சந்தோஷம்! உங்கள் இளவரசி எங்கள் வசமே இருந்து வருகிறாள். அவளை நீங்கள் அழைத்துப் போகலாம்'' என்று சொல்லி,

சத்திரத்தின் உள் இருட்டைப் பார்த்து ''சுவர்ணமுகி'' என்று அழைத்தான்.

(தொடரும்)

# மனவாசம்

**கண்ணதாசன்**

## 29. புதிய வீட்டில் தலை தீபாவளி

திரு எம். பி. சுப்பிரமணியத்துக்கு எப்போதுமே திட்ட வட்டமான கொள்கைகள் உண்டு. அவர் சரி என்று நினைப்பதைச் செய்து தீர்ப்பார். அதில் லாப நஷ்டம் பார்க்க மாட்டார். 1952ல் இருந்து சட்ட சபை உறுப்பினராக இருந்தவர். அப்போது அவர் தி. மு. க. மெம்பரல்ல. 'சட்டசபையில் திராவிட நாடு கோரிக்கையை ஆதரிப்பேன்' என்று கையெழுத்துப் போட்டுவிட்டு தி.மு.க.வை ஆதரித்தவர். அன்றைளில் அவரும் திரு ஏ. கோவிந்தசாமியும் மட்டுமே தி.மு.க.வின் ஆதரவைப் பெற்ற எம். எல். ஏ.க்கள். அதன் பிறகுதான் இருவரும் கழகத்தின் உறுப்பினர்கள் ஆனார்கள்.

1961ல் சம்பத்தும் அவனும் கட்சியை விட்டுப் பிரிந்தபோது, எம். பி. எஸ். பிரியாமல் இருந்திருந்தால் 62ல் எம்.எல்.ஏ.ஆகவும் 67ல் மந்திரியாகவும் ஆகியிருப்பார். அந்த லாபங்களுக்காக அவர் உள்ளுணர்ச்சியை மறைக்கத் தயாராக இல்லை.

அரசியலில் கஷ்டங்களையே அனுபவித்த எம். பி. எஸ். அவனது அழைப்பின் பேரில் துவாரகாவுக்கு வந்தார். அவனும், பூவராகனும், கோசல்ராமும் எவ்வளவோ சொல்லிப் பார்த்தார்கள். எம். பி. எஸ். மறுத்து விட்டார். காரணம் சம்பத்திடம் அவர் வைத்திருந்த நம்பிக்கை. சம்பத் ஒரு முடிவெடுத்தால்தான் அவர் எடுப்பார்.

சம்பத்துக்கு அப்போது இந்திரா காங்கிரஸ் வளரும் என்ற நம்பிக்கை இல்லை.

''என்ன சார் செய்வது? எப்போதும் நான் கட்சி மாறுகிறேன் என்று என் தொகுதியில் சொல்கிறார்கள். நான் காமராஜருடனேயே இருந்து

✕ சந்திரசேகர்



விடுகிறேன்; என்னை விட்டு விடுங்கள்'' என்று முடிவாகக் கூறிவிட்டார்.

அவர்கள் மூவரும் ஏமாற்றத்தோடு வசர் திரும்பினார்கள்.

காமராஜரை விட்டுப் பிரிந்து அவன் இந்திரா காங்கிரசில் சேர்ந்ததை, அன்று யாருமே ஒப்புக்கொள்ள வில்லை. அன்று அவனைக் கேலி செய்த எல்லோருமே இன்று இந்திரா காங்கிரசில் இருக்கிறார்கள்.



✕ மோகன்தாரியா

அரசியலில் அவன் மேற்கொள்ளும் முடிவு ஆரம்பத்தில் பரபரப்பாகவும், ஒரு குடிகாரனின் செயலாகவும்தான் தோன்றும். ஆனால் அவன் எடுத்த முடிவை நோக்கித்தான் மற்றவர்கள் வரிசையாக வந்து சேருவார்கள்.

'இந்திராவை ஏன் ஆதரிக்கிறேன்' என்பதை விளக்க அவன் பொதுக் கூட்டங்களுக்குப் போக முடிவு கட்டினான்.

அந்த நேரத்தில் இந்திராவின் கோரிக்கை மாநாட்டுக்குத் தமிழ் நாட்டிலிருந்து ஒரு ஸ்பெஷல் ரயில் புறப்பட்டது. அந்த ரயிலில் சென்றவர்களை வழியனுப்ப அவன் சென்ட்ரல் ஸ்டேஷனுக்குச் சென்றிருந்தான்.

ரயிலில் இருந்தவர்களைப் பார்த்தபோது அவனுக்கு ஒரே சங்கடமாக இருந்தது. அவர்களில் பெரும்பாலோர் ஏற்கனவே காமராஜரால் விரட்டப் பட்டவர்கள். பலர் மோசமான நபர்கள். எந்தக் கட்சி புதிதாக ஆரம்பமானாலும் அதை நோக்கி ஓடுகிற

கூட்டம் ஒன்று உண்டு. அது மாதிரிக் கூட்டம் தான் ரயிலில் இருந்தது. நல்ல வேளையாக அந்த ரயிலில் அவன் பயணம் செய்ய வில்லை. தஞ்சை ராமமூர்த்தியோடு மறுநாள் விமானத்தில் பயணம் செய்தான்.

டெல்லி அவனுக்குப் புதிய ஊரல்ல. ஆனால் அன்று அவன் பார்த்த டெல்லி புதி தாகவே தோற்றமளித்தது. அழிந்துபோக வேண்டிய காங்கிரஸ் மீட்கப்பட்டது போல் தோன்றியது.

1947ல் சுதந்திரம் வந்தபோது காங்கிரசை எதிர்க்க ஆளே இல்லாமல் இருந்தது. 52ல் ஒரு சரிவு; 57ல் ஒரு சரிவு; 62ல் ஒரு சரிவு; 67ல் காங்கிரசுக்கு மெஜாரிட்டி கிடைக்காது என்ற நிலை. நேருவின் மறை வுக்குப் பிறகு எதிர்க் கட்சிகளின் கைவரிசை.

பார்லிமெண்டில் வேறு கட்சிவந்துவிடுமோ என்று பயந்தபோது காங்கிரஸ் பிளவு பட்டது. இந்திராவுக்குப் புது வெள்ளம் வந்தது.

67ல் காங்கிரஸைக் காப்பாற்றிய இந்திரா 69ல் ஏற்பட்ட பிளவுக்குப் பிறகு காங் கிரசை ஓகோவென்று உச்சியில் கொண்டு போய் வைத்துவிட்டார்.

பாங்குகள் அரசுடைமை போன்ற தீவிரத் திட்டங்களால் காங்கிரஸை மக்கள் கட்சி யாக்கி விட்டார்.

டெல்லியில் ரிக்ஷா, டாக்ஸி எதில் ஏறி னாலும் ''இந்திராஜி ஜிந்தாபாத்'' கோஷம்.

முதியதலைவர்களின் காங்கிரஸுக்கு 'ஸ்தா பன காங்கிரஸ்' என்று பெயர் வந்தது.

ஜனங்களின் அபிப்பிராயங்களை நேரில் கண்டும்கூட அவர்கள் இந்திராவை ஒப்புக் கொள்ளவில்லை.

டெல்லியில் இந்திரா கூட்டிய மாநாட்டை 'தமாஷா' என்று வருணித்தார் நிஜலிங் கப்பா.

மாநாடு அன்று டெல்லி கன்னாட் சர்கஸி லுள்ள ஒரு ஹோட்டலில் அவன் தங்கி இருந் தான். வழக்கம்போல் எல்லோருக்கும் அவன் செலவு செய்தான். டெல்லியில் அவனுக்குப் புதிய நண்பர்கள் கிடைத்தார்கள்.

அண்மையில் பாண்டிச்சேரி கவர்னராக இருந்த குல்கர்னி, பம்பாய் பிரபாகர் குண்டே, ஆர். கே. சின்ஹா, அரித் நஹாதா, அவனைப் பார்க்க வேண்டும் என்று சென்னையிலேயே தேடி யலைந்த அமைச்சர் கே. வி. ரகுநாத ரெட்டி – அந்த அனுபவம் அவனுக்குச் சுகமாகவே இருந்தது.

அவனோடு கூடவே இருந்தார் தொழி லாளர் தலைவர் எஸ். சி. சி. அந்தோணிப் பிள்ளை.

டெல்லியில் இருந்து திரும்பிய பிறகு தமி ழக இந்திரா காங்கிரஸ் சார்பில் பல இடங் களில் கூட்டங்கள் போடப்பட்டன. எல்லாக் கூட்டங்களிலும் ஸ்தாபன காங்கிரஸ் காரர்கள் கலவரம் புரிந்தார்கள். அவன் அந்தக் கூட்டங்களுக்குப் போகவில்லை. மாறாக கம்யூனிஸ்டுகள் கூட்டிய கூட்டங்களில் கலந்து கொண்டான்.

அப்போது இந்தியக் கம்யூனிஸ்டு கட்சி இந்திராவுக்குப் பலத்த ஆதரவு கொடுத்தது. தமிழகத்தில் அவனுக்குப் பலத்த பாதுகாப்பு கொடுத்தது.

அன்றும் சரி, இன்றும் சரி; இந்திரா காங்கிரஸ் கூட்டம் என்றால் ஆள் வருவ தில்லை; அவன் பேசினால் ஓரளவு கூட்டம் வந்தது.

தஞ்சாவூரிலே ஒரு கூட்டம். அவனும் தஞ்சை ராமமூர்த்தியும் பேசினார்கள்.

தஞ்சை ராமமூர்த்தி பேசும்போது நாக்குத் தடுமாறி எதையோ சொல்லி விட்டார். கூட்டத்தில் இருந்த ஸ்தாபன காங்கிரஸ் காரர்கள் 'ஓ' என்று சத்தம் போட்டு விட்டார்கள்.

அவன் பேச எழுந்தான்.

இந்தியாவின் வறுமை பற்றியும் சோஷ லிஸம் பற்றியும் உருக்கமாகப் பேசினான். கூட்டத்தில் பெரும்பாலோர் அழுதார்கள். கூட்டம் அமைதியாக முடிந்தது. கடைசியாக ஒருவர் மட்டும் ''காமராஜ்'' என்று கத்தி னார். ''வாழ்க'' என்று யாரும் சொல்ல வில்லை. காரணம் அவனே காமராஜரைப் புகழ்ந்துதான் பேசியிருந்தான்.

திரு சி. சுப்பிரமணியம் அவனிடம் மிக ஈடுபாட்டோடு நடந்து கொண்டார்.

இந்திரா காங்கிரஸ் மக்கள் இயக்கமாக இல்லாததால், அவனுக்கு வேலை இல்லாமல் போய்விட்டது. அப்போதுதான் ஏராள மான கவிதைகள் எழுதத் தொடங்கினான்.

இன்று அவனது கவிதைத் தொகுதிகளில் காணப்படும் அரசியல் சார்பற்ற கவிதைகள் அனைத்தும் அன்று தொடங்கியவைதான்.

இந்திரா காங்கிரசுக்கு மக்கள் இருந் தார்கள், தலைவர்கள் இருந்தார்கள். தொண் டர்கள் இல்லை, தமிழகத்தில்.

தலைவர்களும் பிடித்து வைக்கப்பட்ட தலைவர்களாக இருந்தார்களே தவிர, தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவர்களாக இல்லை.

கட்சியின் சில அங்கங்களில் தவறான மனி தர்கள் ஆதிக்கம் செலுத்தினார்கள்.

இந்த நிலையில் இந்திரா காங்கிரசின் ஒரு பிரிவான சோஷலிஸ்ட் போரத்தின் தமிழ கத் தலைவராக அவன் நியமிக்கப்பட்டான். அதன் அகில இந்திய கன்வென்ஷன், சென்னையில் நடைபெற்றது. சந்திரசேகர், மோகன் தாரியா, உட்பட அனைவரும் கலந்து கொண்டார்கள். அதைப் பிரம்மாண்டமாக அவன் நடத்திக் காட்டினான். பலருடைய ஆங்கிலப் பேச்சை அவனே மொழிபெயர்த் தான். பொதுக் கூட்டமும் நல்ல அளவில் இருந்தது.

அந்த போரத்தில் இருந்த காங்கிரஸ்காரர் களை காங்கிரஸ் சரியாக உபயோகப்படுத்திக் கொண்டிருந்தால், 77ல் அதுவும் தோற் றிருக்காது. இந்திராவும் தோற்றிருக்க மாட் டார்.

(வளரும்)

தன் மாமாவின் சாவுக்காக லீவு கேட்டுக்கொண்டு போனான், ஆபீஸ் பையன்.

அன்று மத்தியானம் கால்பந்தாட்டத்தைக் காணச் சென்ற ஆபீஸ் அதிகாரி, பையன் பந்தேகியாக அங்கே உட்கார்ந்திருப்பதைக் கண்டதும், ''என்னப்பா இதுதான் உன் மாமாவின் சாவா?'' என்றார்.

அவன் ஒரு விநாடி திகைத்தான், பிறகு சமாளித்துக் கொண்டு சொன்னான்: ''அப்படித்தான் தோன்றுகிறது சார்! அவர்தான் இந்த ஆட்டத்தின் 'ரெப்ரீ' யாக இருக்கிறார்!''

- கல்கத்தா 'மிக்கி'

# ரயில் பயணங்களில்

● கதை: திரைக் கதை, வசனம், பாடல்கள், இசை டைரக்ஷன் எல்லாப் பெட்டிகளையும் இழுப்பது டி. ராஜேந்தர் என்ற என்ஜின்.

கதை: காதலித்தவனை விடுத்து வேறு ஒருவனைக் கைப் பிடித்து, அவன் பழைய காதலைச் சொல்லிக் குத்திக் குத்திக் கொடுமைப்படுத்தும் கதை. பழசுதான். அதிலும் முடிவு மகா செயற்கை.

திரைக் கதை: ஒருதலை ராகம் பாணியில் மாணவர் கூட்டம், தலைவருக்குப் பதிலாக மாஸ்டர் கூத்து, மட்ட ரகமாய்ப் பெண்களைக் கேலி செய்தல், ரவீந்தர் பாணியில் கலக்கும் ராஜீவ், சங்கர் பாணியில் ஸ்ரீதரின் மேடைப் பாட்டு, கடைசியில் மகா தாடியுடன் ஹீரோ (ஆமாம் தாடி வளர என்ன மூலிகை யூஸ் பண்ணீங்க) அதிகம் பேசாத ஹீரோயின், சோக முடிவு.

| | |
|---|---|
| வசனத்துக்கு | ரூ. 0–50 |
| நடிப்புக்கு (ராஜீவ்) | ரூ. 0–45 |
| இசைக்கு | ரூ. 0–45 |
| டைரக்ஷன் | ரூ. 0–50 |
| | ரூ. 1–90 |
| கொடுத்தது | ரூ. 2–90 |
| கிடைத்தது | ரூ. 1–90 |
| நஷ்டம் | ரூ. 1–00 |

வசனம்: படத்தில் சிறப்பம்சம் இது. ராஜேந்தருக்குத் தமிழில் விளையாடத் தெரிந்துள்ளது. ஜோதி போனில் அடிக்கடி அடிக்குஅடிபேசுவதும், ராஜீவ் பாட்டின் அடியைச் சொல்லி அடிப்பதும் இப்படி ஏராள சிலேடை விளையாட்டு! சென்னாரில் தப்பித்த வரிகளும்உண்டு. படத்தில் யாராவது ஒருவர் மட்டும் இந்தப் பாணியில் வசனம் பேசினால் ''கேரக்டர்'' கிடைக்கும். அத்தனைபேரும் வசனவிளையாட்டு விளையாடினால் செயற்கையாக உள்ளது.

பாடல்கள்: அர்த்தம் தொனிக்கும் இனிமையான பாடல்கள். இரும்பவும் ஒ.த.ரா. பாணியில் (ராசியில்லாத ராஜா) ஒரு பாடல் தேவையில்லையே!

இசை: இசையாக இருக்கிறது. பாடல்கள் சில ஹிட்டாகலாம். பிளாஷ் பேக் பின்னணியில் வரும் சில பாடல் வரிகள் மிகவும் இதமாக இழைகின்றன. சில டியூன்கள் இவரின் பழைய ட்யூன்களை (உதாரணம்: முத்து முத்தா ஜாதி முல்லை) ஞாபகப்படுத்துகின்றனவே!

டைரக்ஷன்: புது நடிகர்களிடம் பிரமாதமாக வேலை வாங்கியிருக்கிறார். துடிப்பான ராஜீவ், வசனங்களை ஏற்ற இறக்கம் தந்து உச்சரித்து (உ-ம். ஜகதலப் பிரதாபன்) கனம் உண்டாக்குகிறார். ஜோதி ஒளி வீசுவார். ஹீரோவின் முறைப் பெண் துணி உலர்த்துகையில் தன் துணியை அத்தான் உடையுடன் இணைத்துக் காட்டுமிடத்திலும், ராஜீவ் ஜோதி காலில் சிகரெட்டால் சுடுமிடத்திலும், மு. மேத்தாவின் ஒரு கவிதை வரிக்கு வரி அப்படியே பொருத்தமாகக் கையாளப்படுமிடத்திலும் டைரக்டர் திறமை கண் சிமிட்டுகிறது. இதுபோல நிறைய இடங்கள். காலேஜ் கும்பல் ரகளை தேவையின்றிக் குறுக்கிட்டுப் பட வேகத்துக்கு சிகப்பு சிக்னல் காட்டுகிறது. ஜோதி தன் அட்ரஸைக் காகிதங்களில் எழுதிப் பறக்க விடும் அபத்த ஐடியா சினிமாவுக்கே சொந்தம். படத்தில் முடிவு உட்பட செயற்கையின் வெளிப்பாடு மிக அதிகம்.

-நளினி சாஸ்திரி



இண்டர்மீடியட் வரை படித்தவர் தேங்காய் சீனிவாசன். அதற்குப் பிறகு கொஞ்ச காலம் பெட்ரோல் பங்கில் பில் போடுபவராக இருந்தார். பல இடங்களில் சின்னச் சின்ன வேலைகளெல்லாம் செய்துவிட்டு கடைசியில் இவர் தஞ்சமடைந்த இடம் கதாசிரியர், வசன கர்த்தா ஜி. பாலசுப்பிரமணியத்திடம். நகல் எடுப்பவராக அவரிடம் வேலைக்கு அமர்ந்தார். பின்பு உதவியாளராக ஆனார். படிப் படியாக உயர்ந்தார்.

திரைப்பட வாழ்க்கை தொடங்கு முன்பு இவர் இருந்தது தண்டையார்ப்பேட்டை. அங்குதான் ஒரு வீட்டில் இவர் குடும்பம் முழுவதும் இருந்தது. இன்று இவர் வீடு மாறினாலும் இவர் குடும்பத்தினர் அங்கு இன்னும் வசிக்கிறார்கள். கீழே நர்ஸரி பள்ளிக்கூடம். மாடியில் குடும்பம்.

''வாருங்கள் வாருங்கள்'' என்று என்னை வரவேற்று உள்ளே அழைத்துச் சென்றார் தேங்காய். நுழைந்தவுடனேயே இடது பக்கம் ஒரு அறை. ''இதில்தான் எனது தந்தையார் ராஜவேலு முதலியார் வசித்தார். இங்குதான் தேங்காய் சீனிவாசன் என்ற நடிகனும் உருவானான். எப்படித் தெரியுமா? மெட்டல் பாக்ஸ் கம்பெனியின் வருடாந்தர விழாவை யொட்டி கலை நிகழ்ச்சி. அதில் அவர் (எனது தந்தையார்) ''ஜமீன்தார்'' என்ற நாடகம் போட்டார். எப்பொழுதுமே பேண்டும் கோட்டுமாக இருக்கும் அவர் நாடகத்தில் வேட்டி கட்ட வேண்டிய நிர்ப்பந்தம். விளைவு, மேடையிலேயே வேட்டி பல தடவை அவிழ, அவர் பிடித்துக் கொள்ள அதுவே ஒரு கேலிக் கூத்தாகி

# தேங்காய்க்குப்

✠ ''கதவில் பெயரைக் கவனித்தீர்களா? சித்தூர் ஸ்ரீநிவாசன்!''

விட்டது. வீட்டுக்கு வந்த அவரிடம் 'நீங்களும் உங்கள் நாடகமும்! நடிக்கத் தெரியணும், இல்லாவிட்டால் மேடையே ஏறக் கூடாது!' என்று சொன்னேன்.

'ஆமா, பெரிய பிறவி நடிகன் மாதிரி பேசறியே' என்றார் அப்பா. 'என்னாலேயும் நடிக்க முடியும். நான் நிருபிச்சுக் காட்டறேன்' என்று கூறினேன்.

''இப்படி நான் சொல்லி விட்டதால் எப்படியாவது ஒரு நாடகத்தை எழுதி என் தகப்பனார் முன்னிலையில் நடித்துக் காட்டி விடவேண்டும் என்ற வீராப்பு உண்டாகி விட்டது. அப்பொழுது நான் ஐ. வி. எஃப். பில் வேலையிலிருந்தேன். அகில இந்திய ரயில்வே வார விழா. நானும் ஒரு நாடகம் எழுதி அரங்கேற்றம் செய்தேன். தகப்பனாரும் வந்திருந்தார். 60 நாடகங்களுக்குள்ளும் இதுவே சிறந்தது என முடிவாகி, ஜனாதிபதியின் பரிசை எனக்குப் பெற்றுத் தந்தது.''

✠ ''எப்போதும் பேண்டும் கோட்டுமாய் இருப்பார் என் அப்பா இதோ இப்படத்திலும்தான்!''



# பிடித்தது அப்பளம்!







⌘ படிப்படியாக உயர்ந்தது வாழ்க்கையிலும்தான்

⌘ ''இப்படித்தான் திருட்டுத்தனமாய் நுழைந்து அப்பளம் அபேஸ்!''

⌘ ''1958ல் திருமணம் செய்துகொண்டு இந்த அறையில்தான் முதலிரவு!''

பேசிக்கொண்டே அடுத்த அறைக்குச் சென்றார். அது ஹால். இங்கு பல்வேறு புகைப் படங்கள் மாட்டப்பட்டு இருந்தன. இரண்டு புறமும் சிறு அறைகள். வலதுபுற அறைக்குள் நுழைந்தவுடன் சாவகாசமாகக் கட்டிலில் உட்கார்ந்தார். இன்று பேரன் பேத்திகளுடன் இருக்கும் தேங்காய் சீனிவாசன். ''1958ம் வருடம் மே மாதம் முதல் தேதி திருமணம் செய்து கொண்டு இந்த அறையில்தான் முதலிரவு! இதோ இந்தக் கதவில் பாருங்கள் சித்தூர் சீனிவாசன் என்று எழுதியிருக்கிறது. இதற்குக் காரணம் என்னுடைய இரண்டாவது வயதில் எனது தாத்தா ஷண்முக முதலியார் என்னைத் தத்து எடுத்துக் கொண்டார். பள்ளியில் என்னைச் சேர்க்கும்போது சித்தூர் சீனிவாசன் என்று எழுதிக் கொடுத்து சி. ஆர். சீனிவாசன் என்று சுருக்கி ரிஜிஸ்டரில் பதிவு செய்தார்.

''என். கே. டி. கலா மண்டபத்தில் 'கல் மணம்' என்ற நாடகம் நடத்திக்கொண்டிருந்தேன். அதில் தேங்காய் விற்கும் பாத்திரம். நாடகத்தைப் பார்த்துவிட்டு மேடையில் பேசிய டணால் தங்கவேலு, என் நடிப்பைப் பாராட்டிவிட்டு 'தேங்காய் சீனிவாசன்' என்று பெயர் சூட்டினார். 'ஒரு வருடத்தில் நீ சினிமாவில் நடிப்பாய்' என்று சொன்னார். ஆனால் ஆறே மாதத்தில் நான் பல படங்களில் நடிக்க ஆரம்பித்து விட்டேன்!''

ஹாலின் இடதுபுறம் சாமி அறைக்குள் சென்றார் தேங்காய். ''இங்கு பிள்ளையார் பூஜை நான் தினமும் செய்வேன். இதற்கு நேர் எதிரே சமையல் அறை. எனக்குப் பொரித்த அப்பளாம் என்றால் பிடிக்கும்! சின்னப் பையனாக இருக்கும்போது வீட்டில் அப்பளாம் பொரித்தால் அம்மாவிடம் கேட்பேன். 'எல்லோருக்கும் கொடுக்கும்போது தான் உனக்கும்' என்று கூறிவிடுவான். எனக்கோ ஆசையை அடக்க முடியாது. அம்மாவுக்குத் தெரியாமல் அப்பளத்தை நான் திருடிச் சாப்பிடுவது இந்த அறையில்தான்.'' என்றார் தேங்காய்!

—சலன்

புகைப்படம்: ஏ. வி, பாஸ்கர்



"அன்னை பராசக்தி "அங்காள பரமேஸ்வரி தாயே துணை"

## சேலம் சித்த வைத்தியர்

# டாக்டர் S. R. சிவராஜ்

அவர்களின் சாதனை

**சிவராஜ் சித்த வைத்தியசாலையில் தயாராகும் மருந்துகள், பிணிகளை நீக்கவும், புத்துயிரளிக்கவும் பெரிதும் உதவுகிறது**

○ குழந்தை பாக்கியம் (கெர்ப்பணுக்கள்) இல்லாதவர்கள், ○ ஆண்மை வீரியம் இல்லாமல் பலஹீனமடைந்தவர்கள், ○ வாலிபத்தை வீணுக்கி, சக்தி இழந்தவர்கள், பயமுள்ளவர்கள் ○ கல்யாணம் செய்யப் பயந்து காலம் கடத்தி வருபவர்கள், ○ அதிக உஷ்ணம் — கண் எரிச்சல் — தூக்கமின்மை — உடல் வலி, ○ நரம்புத் தளர்ச்சி — உடலுறுப்புக்கள் தளர்ச்சி — நடுக்கம், ○ மற்றும் உங்கள் ரகசிய வியாதிகளுக்கும்

நாள்பட்ட ஆஸ்துமா — இளைப்பு — இருமல் — தும்மல் — மூக்கடைப்பு — பீனிசம் — சைனேஸ பிலியா — இருதய வலி — படபடப்பு — அன்னை விலாவைத் தூக்கி தூக்கி மூச்சு வாங்குதல் — கோழை கட்டு, பனி, மோடம், மழை காலங்களில் ஏற்படும் இளைப்பு — கர் மூர்ரென்று மேல் மூச்சு போன்ற கப வியாதி பித்தத்தினுலும், வாய்வுனுலும் ஏற்படும் மலச்சிக்கல் — மலக்கட்டு, வயிற்றுவலி — குடல் புண் — பித்த மயக்கம் — தலைவலி — தலைபாரம் நாள் பட்ட ஒரு தலைவலி—கண் பார்வையில் பூச்சு பறப்பது போலிருத்தல் பசியின்மை — பொருமல் — வயிறுப்புசம் — காமாலை — சோகை — இரத்தக்குறைவு மேகத்தினுலும் — தொத்து வியாதியினுலும், விஷப்பூச்சுகள் கடியினுலும் ஏற்படும் சரும நோய்கள்—படைகள்—கரப்பான் —அரிப்பு - கருநிற, செந்நிற படைகள் — செதில்களாக உதிரும் கிரந்தி படைகள் — வெண் மேகம், பாதவெடிப்பு — பனி வெடிப்பு முதலான நோய்கள். பெண்களுக்கு ஏற்படும் சகலவித நோய்கள். மேலே குறிப்பிட்ட வியாதியஸ்தர்கள் எமது பிரதம டாக்டரை

**◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇✻ சென்னையில் கீழ்க்கண்ட இடங்களில் ✻◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇**

சந்தித்து வைத்திய ஆலோசனை பெறலாம்

கீழ்க்கண்ட தங்குமிடங்களில் எமது கிளை அலுவலகத்தில் எமது மருந்துகள் கிடைக்கும்

கிளை வைத்தியசாலை

**சென்னை-1**

தேதிகள் : 1, 2, 3 தேதி வரை

பிரதம வைத்தியர்

**ஹோட்டல் ரோலக்ஸ் ரூம் நெ. 5ல்**

போன் : 24236

(190 NSC போஸ் ரோடு (சௌகார் பஜார்)
(பூக்கடை — டெலிபோன் ஆபீஸ் எதிரில்)
சென்னை-1

பார்க்கும் நேரம்: காலை 8 மணி to இரவு 8 மணி

கிளை வைத்தியசாலை

**சென்னை-2**

தேதிகள் 4ந்தேதி முதல் 10ந்தேதி வரை

பிரதம வைத்தியர்

**ராமச்சந்திரா லாட்ஜ் ரூம் நெ. 3ல்**

போன் : 846526

7, அத்திப்பட்டன் தெரு மவுண்ட் ரோடு
PORR & சன்ஸ் — பெட்ரோல் பங்க்
மேற்குபுரம், சென்னை-2

காலை 8 மணி முதல் இரவு 8 மணி வரை

**ஆலோசனை கட்டணம் ரூ. 10-00 ✻ சிகிச்சைக் கட்டணம் தனி**

எமது கேட்லாக் வேண்டுவோர் ரூ. 1-00 ஸ்டாம்ப் அனுப்பியோ; M.O. செய்தோ பெறலாம்

**எமது உயர்ந்த — விசேஷ — ஸ்பெஷல் மருந்துகள் கிடைக்கும்**

**உயர்ந்தரக சிகிச்சை 1 மாதம் ★ விசேஷ சிகிச்சை 1 மாதம் ★ ஸ்பெஷல் சிகிச்சை 1 மாதம்**

| A வகுப்பு | B வகுப்பு | C வகுப்பு | A வகுப்பு | B வகுப்பு | C வகுப்பு | மீடியம் | ஸ்பெஷல் | 1 நெம்பர் |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1500-00 | 750-00 | 500-00 | 400-00 | 300-00 | 200-00 | 175 00 | 150-00 | 115-00 |

ஹெட்டாபீசுக்கு லெட்டர் எழுதி V.P.P. மூலமும் பெறலாம். தேவையான சிகிச்சைக்கு டிராப்ட் மூலம் (பேங்க் ஆப் இந்தியா) வாங்கி அனுப்பினுல் ரிஜிஸ்டர் பார்சல் மூலம் பெறலாம். டாக்டர் S. R. சிவராஜ் ஹெட்டாபீஸில் 11, 16, 17, 18, 19, 20, 27, 28, 29, 30 தேதிகள் வரை சந்திக்கலாம். மற்ற நாட்களில் வெளியூரில் இருப்பார்.

## H.O. சிவராஜ் சித்த வைத்தியசாலை

சென்ட்ரல் டாக்கீஸ் வடபுரமுள்ள ஏரியில் சேலம் — 636007

# சினிமா சிரிமா!



'பாலைவனச் சோலை' படத்தின் நூறாவது நாள் விழாவையொட்டி அன்று திரைப்படம் பார்க்க வரும் ரசிகர்களுக்கு என்ன கிடைக்கும் தெரியுமா?''

''இது தெரியாதாக்கும், பேரீச்சம்பழம்.''

—ஹெச். என். ஹெச்.
மதுரை—11



''என்னங்க ஆச்சரியமா இருக்குது! நம்ம ராமசாமி எந்த விஷயத்தையும் குழப்பிப் புரியாம பேசுவார்... இப்ப என்னடான்னு திடீர்னு தெளிவாப் பேச ஆரம்பிச்சிருக்கிறாரே!''

'' 'நெல்லிக்கனி' படம் பார்த்திருப்பாரோ என்னவோ!''

கே.எஸ். நாகராஜன்



அவன்: ''எல்லாத் தியேட்டரிலும் மணி அடித்துத்தான் படம் போடுவாங்க. இந்தத் தியேட்டரிலே மட்டும் ஏன் பச்சைக் கொடியும் காட்டிப் படம் போடுறாங்க?''

இவன்: ''ஓடுறது 'ரயில் பயணங்களில்' படமாச்சே!''

பி. ஜோ. ரத்தன்

''நீ பார்த்த 'ரயில் பயணங்களில்' உனக்குப் பிடிச்சது பாட்டா, கதையா?''

''அங்க வித்த முறுக்கும் கடலையும்தான்!''

கோவி. இராசன்





''சார், கதாநாயகன் நாயகியைத் தேடிப் போவதற்குள் இரயில் போய்விடுகிறதே... அப்போ என்ன நினைச்சீங்க?''

''உம்...படத்திலாவது ரயில் ஒழுங்கா வந்து குறிப்பிட்ட நேரத்துக்குள் போய் விடுகிறதேன்னு நினைச்சேன்.''

எஸ். ராஜு



கதாசிரியர்: ஒரு ஊரில் ஒரு கல்லூரி. அதில் ஒரு மாணவனும் ஒரு மாணவியும்...

தயாரிப்பாளர்: சார் பிடிங்க அட்வான்ஸ் எங்க படத்துக்கு நீங்கதான் கதாசிரியர்.

எஸ். ராஜு.



.'' 'ரயில் பயணங்களில்' டைரக்டர் யார்னு பிரச்னை வந்தா நல்லது.''

''ஏன்டா?''

''அப்பத்தானே படம் பேமஸா ஓடும்!''

எஸ். வேலுசாமி



''என் மனைவி 'பெண்ணின் வாழ்க்கை' போக வேண்டும் என்றாள். நான் 'கடல் மீன்கள்' போகலாம்னேன். அதற்குள்...''

''அதற்குள் என்ன?''

''அவள்தான் 'அவசரக்காரி' ஆயிற்றே, கோபித்துக் கொண்டு, 'ரயில் பயணங்களில்' ஊருக்குப் போய்விட்டாள்!''

எஸ். வேலுசாமி

# ஒரு அவஸ்தையின் ஆரம்பம்

சுபா

**ப**ஸ்ஸை விட்டு அவள் இறங்கினாள். லேசாய்த் தலையை மட்டும் சுழற்றி அவனைத் தேடினாள். ரமணிக்கு மார்பு படபடவென்று அடித்துக் கொண்டது. இனம் தெரியாத துடிப்பில் நெஞ்சு மலர்ந்து போயிற்று.

சாய்ந்து கொண்டிருந்த தூணிலிருந்து விலகினான். அவள் இன்னமும் மற்றத் திசைகளில் துழாவிக் கொண்டிருக்கையில் மெல்ல அவளை நெருங்கினான்.

''ஹலோ வைஜயந்தி....''

''ப்ஹா...'' என்று திடுக்கிட்டாள். திரும்பிப் பார்த்துக் கண்களை விரித்தாள்.

''ச்சே... நீங்கதானா... பயந்துட்டேன்.''

''பயமா... என்னத்துக்கு?''

''பின்ன... சட்னு காது கிட்ட வந்து வைஜயந்தின்னு கூப்பிட்டா?''

''என்ன புத்திசாலி நீங்க... இந்தச் சின்ன விஷயத்துக்கா பயம்?''

''பயம் வேறே... புத்திசாலித்தனம்வேறே இல்லையா?''

''வாஸ்தவம்தான்.''

''பஸ்ஸிலேர்ந்து இறங்கினப்போ நீங்க கண்லயே படலையா... ஒரே கோவமா வந்தது. நீங்க மட்டும் வராம இருந்தா நாளைக்கு ஃபோன்லே கூப்பிட்டுக் கண்டபடி டோஸ் விடலாம்னு இருந்தேன்.''

''அது எப்படி? நான் தானே உங்களை வரச் சொன்னதே... அதுவுமில்லாம மொதல்தடவையா ஒரு பொண் மனசுலே குழப்பமில்லாம நான் கூப்ட்ட.. ஒடனே வரேன்னு சொல்லியிருக்கறப்ப...''

''சரி... உள்ளே போகலாமா?'' என்று அவள் கேட்டாள்.

''ஷ்யூர்.''

டிரைவ் இன் ஹோட்டலின் மரங்கள் மாலை வெளிச்சம் உச்சியில் மட்டும் மஞ்சளாய்ப் படிந்திருக்கச் சிலிர்த்துக் கொண்டிருந்தன. தடதடவென்று மோட்டார் சைக்கிளில் பசை போட்டு ஒட்டின இரண்டு பேர் கடந்தார்கள். பார்க்கிங் பகுதியில் கார்க் கதவுகளில் பொருத்தப்பட்ட ட்ரேக்களில் பண்டங்கள் ஆவி பறந்தன.

''ஸெல்ஃப் ஸர்வீஸ் போவமா... இல்லேன்னு கார்டனுக்குப் போயிடுவமா?''

''எங்க வேணா'' என்றாள் அவள். ''ஆனால் வெறும் காப்பி மட்டும்தான். வேறே ஒண்ணும் வேண்டாம்.''

''சேச்சே... அது நல்லாயிருக்காது.... ஸ்வீட் சாப்பிடணும்!?''

மில்க் பர்ஃபி வந்தது. ஸ்பூனால் ஓரமாய்க் கிள்ளி எடுத்தாள். அவள் விண்டு உண்ணும் அழகை ரசித்தான். உடனே ரசனையின் திக்கு மாறிற்று.

பக்கவாட்டில் ஒரு மார்பும், நிறைய வயிறும் தெரிய அவள் கட்டியிருந்த புடவையில் கவனம் போயிற்று.



யம்மா! என்ன இடுப்பு இது! குயவன் அமுத்திப் பிடித்த மாதிரி சட்டென்று குறுகி உடனே சரிந்து திரிகிற அகலம் கண்ணை உறுத்திற்று. மிக மெலிதான ஸெண்ட் நாசியை வருடிக் கொடுத்தது.

''என்னை எதுக்காக ஃபோன் பண்ணி வரச் சொன்னீங்க?''

''உட்லண்ட்ஸ்ல டிபன் சாப்பிடத்தான்.''

''வெளையாடறீங்களா?''

''நீங்க ஒரு விஷயத்தை யோசிக்கப் பார்த்தீங்களோ?''

''எதை?''

''நானும் ஒங்க ஆஃபீசுக்கு அடிக்கடி வரேன். என் வேலையை முடிச்சுக்கிறேன், திரும்பிப் போறேன். எத்தனை பெண்கள் வேலை செய்யறாங்க உங்க ஆஃபீஸ்ல. மத்தவங்க எல்லோரையும் விட்டு விட்டு உங்களை ஏன் கூப்பிட்டேன்னு நினைச்சுப் பார்த்தீங்களா?''

''நானே கேக்கணும்னு இருந்தேன்.... ஆமாம்... ஏன்?''

''எனக்கு என்னவோ பார்த்த முதல் நாளே உங்களைப் பிடிச்சுப் போச்சு. அத்தனை பெண்கள் கிட்டயும் இல்லாத ஒரு தனி அட்ராக்ஷன் உங்க கிட்ட இருக்கு... பிராபப்ளி ஒங்க வெளிப்படையான குணம்.''

''நானும் யார் கூட வேணும்னாலும் உட்லண்ட்ஸ் வருவேன்னு நெனைச்சீங்களா?''

''பின்ன நான் கூப்பிட்ட உடனே ஏன் சரின்னீங்க?''

''உங்க பேர்ல எனக்கு ஏற்பட்ட நம்பிக்கைதான்...''

''என்ன நம்பிக்கை?''

''நீங்க ஜெண்டில்மேன்னு.... எனக்கு ஒரு ஆளோட கண்ணைப் பார்த்தாலே அவரோட குணாதிசயம்லாம் புரிஞ்சு போயிடும்.''

''என் கண்ல என்ன தெரிஞ்சுது?''

''ஒரு மென்மை...சத்தம் போடாம நீங்க பேசற தோரணை... அளவோட பேச்சை நிறுத்திக்கிற சாமர்த்தியம்... நீங்க தப்பு வழிக்கெல்லாம் போக மாட்டீங்கன்னு ஒரு யூகம்....''

''அப்புறம் என்ன ஸார்....?''

''ரெண்டு ஸெட் போண்டா கொண்டு வாங்க...'' என்று ஸர்வரை நகர்த்தினான் ரமணி.

''அப்படி என்ன வித்தியாசமாக் கேட்கப் போறீங்க? பொம்பிளைங்களைப் பத்தி ஏதோ கேக்கணும்னு ஃபோன் பண்ணீங்களே....'' என்றாள் வைஜயந்தி.

''அதாவது வைஜயந்தி... சின்ன வயசு லேர்ந்தே எனக்கு ஒரு ஆசை.... நாங்க ஆம்பிளைப் பசங்க நாலைஞ்சு பேரா சுத்தறோம்.... ஸைட் அடிக்கிறோம்... ஸிகரெட் பிடிக்கிறோம். ஸெக்ஸ் பத்திப் பச்சை பச்சையாப் பேசறோம்... லேடீஸ்லாம் எப்படி இருப்பாங்க... அவங்களுக்குள்ள என்ன பேசிப்பாங்க... எப்படிப் பழகுவாங்க... அவங்களுக்கு மாத்திரம் ஸிகரெட் பிடிக்கணும்னோ, சர்சர்னு மோட்டார் சைக்கிள்ல காத்தைக் கிழிச்சுக்கிட்டு ஃபாஸ்ட்டா போவணும்னோ, ஓடற பஸ்ல ஃபுட்போர்டில தொத்திட்டுப் போவணும்னோ ஆசையே வராதா? மொத்தத்தில லேடீஸோட பழக்க வழக்கம்... ஆட்டிட்யூட். இதெல்லாம் எப்படி இருக்கும்னு தெரிஞ்சுக்கணும்னு ஒரு ஆசை. கேட்டா செருப்பால அடி விழுமோன்னு ஒரு பயம்....''



''எதுக்கு இதெல்லாம்... ஏதானும் கதை எழுதப் போறீங்களா?''

''கணக்கு எழுதவே இன்னும் சரியாத் தெரியலே... கதைக்கு நான்ஏன் போறேன்!''

''பின்ன ஏதானும் பொண்ணை லவ் பண்ண ஆரம்பிச்சிருக்கீங்களா?''

''ஓ நோ... ஜஸ்ட் எ க்யூரியாஸிட்டி.''

''நீங்க ஒவ்வொண்ணாக் கேளுங்க. சொல்லிட்டே வரேன்...பட் இதெல்லாம் என்னோட பர்ஸனல் வ்யூவா இருக்குமே தவிர மொத்தமாப் பொம்பளைங்களைப் பத்தி இல்லாமப் போகலாம்.''

''தட்ஸ் ஓ.கே.... ஆனா இங்கயேவா பேசி முடிக்கணும்... பீச்சுக்குப் போலாமா?''

''எட்டு மணிக்கு வீட்டிலே இருக்கணுமே....''

''ஏழரை மணிக்கெல்லாம் உங்களை ரிலீவ் பண்ணிடறேன்.... அப்ப ஆட்டோவில போயிடலாமா?''

''போகலாம்'' என்றாள்.

ஆட்டோவில் ஏறுகையில் மனம் துள்ளிற்று. அவள் முகத்தில் சலனமில்லை என்பதைக் காண்கையில் என்ன துணிச்சல் இவளுக்கு என்று மனசு வியந்தது.

''என்ன ஒண்ணும் பேசாம நிறுத்திட்டீங்க?'' என்றாள் வைஜயந்தி.

''ம்....''

''என்ன 'உம்?''

''இல்லே, நமக்குள்ள எதுக்கு இந்த நீங்க, வாங்க, போங்கல்லாம்னு நெனைச்சிட்டிருந்தேன்.... நீ வா, போன்னு பேசறதுல இருக்கிற இண்டிமஸி இதுல வரதில்லே பார்த்திங்களா...''

''ப்ளீஸ்... இப்பத்தான் பழக ஆரம்பிச்சிருக்கோம்.. கொஞ்ச நாள் போகட்டும்! இப்படித்தான் நீங்கள்லேர்ந்து நீன்னு ஆகும். அப்புறம் அடுத்த நாள் சினிமா வரியான்னு கூப்பிடத் தோணும்... அப்படி இப்படின்னு தப்பு நடந்துடும்...''

கொஞ்ச நேரத்துக்கு ரமணிக்கு வாய் அடைத்துப் போயிற்று.

ஆட்டோவுக்குப் பணம் கொடுத்துவிட்டு, இருவரும், மணலில் நடந்து வெளிச்சமாய்ப் பார்த்து உட்கார்ந்தார்கள்.

''காதலைப் பத்தி நீங்க என்ன நினைக்கிறீங்க வைஜயந்தி?''

''எனக்கு அதிலே நம்பிக்கையே இல்லே ரமணி. சும்மா ஒரு அட்ராக்ஷன் மாதிரி தான்... லவ் பண்றதா நெனைச்சுக்கிட்டு ஒருத்தன் மேலே அளவுக்கு மேலே பிரியம் வச்சுட்டு, பிரிஞ்சு போறச்சே அத நெனைச்சு பிழியப் பிழிய அழுறவங்களைக் கண்டா எனக்கு எரிச்சல்தான் பத்திக்கிட்டு வரும். அப்படியே கல்யாணம் பண்ணிக்கிட்டாலும் கொஞ்ச நாள்ல சாயம்லாம் வெளுத்துப் போய், நீ பெரிசா நான் பெரிசான்னு தினம் சண்டை போட்டுக்கிட்டு... சே... வாழ்க்கையே நரகமாயிடும் ரமணி....''

''அரேன்ஜ்ட் மாரேஜ்ல மட்டும் சண்டை வராதா என்ன?''

''வரும். யார் இல்லேன்னா... ஆனா லவ் மாரேஜ்ல எதிர்பார்ப்புகள் ஜாஸ்தி இல்லேயா...அதனால டிஸப்பாயிண்ட்மெண்டைத் தாங்கற சக்தி குறைஞ்சு போயிடும்.''

''அதேதான் என்னோட ஐடியாவும்... க்ரேட் பீப்பிள் திங்க் அலைக்...''

சிரித்தான்.

''என்ன அவ்வளவுதான் கொஸ்டின்ஸா?''

''இல்ல... இன்னும் ஆயிரம் இருக்கு. எல்லாத்தையும் இன்னிக்கே கேட்டுட்டா திரும்ப மீட் பண்றதுக்கு சான்ஸ் இல்லாம போயிடுமேன்னு பார்க்கறேன்.''

சிரித்துவிட்டு எழுந்தாள்.

''ஓகே... போன் பண்ணுங்க... எப்ப, எங்க பார்க்கலாம்னு சொல்றேன்.''

ஃபோன் கிணுகிணுத்தது.

வைஜயந்தி?

இருக்கும். புல்லுக்கு அலையும் குதிரையாய் மனசு பாய, ஓடிச் சென்று ஃபோனை எடுத்தான்.

''மே ஐ ஸ்பீக் டு மிஸ்டர் ரமணி ப்ளீஸ்''

ஆண் குரல் கட்டையாய் வினவிற்று.

''ஹலோ யாரு பேசறது''

''உன்னோட யமன்... கடைசி வார்னிங்... என் லவர் கூட வெளில டிரைவ் இன், பீச்சு அது இதுன்னு இன்னொரு தடவை நீ அலையறதை நான் பார்த்தேனோ அவ்வளவு தான்!'' என்று எச்சரித்தது.

மறுநாளும் போன் வந்தது.

''ராஸ்கல்... சொன்னாக் கேட்க மாட்டே? உதை தின்னுட்டுத்தான் சாகப் போறே... வைஜயந்திக்காக நான் என்ன வேணா செய்வேன்....''

போன் மறுபடியும் ஓய்ந்து போயிற்று.

மனைவி: இன்னைக்குப் பகல் பூரா உங்க ஸ்டெனோவை டேபிள் மேலேயே உட்கார வெச்சிட்டிருந்தீங்களாமே? இங்க வந்து பியூன் சொன்னான்.

கணவன்: என்ன செய்யறது? டேபிள் வெயிட்டைக் காணோம்!

கே. ஆர். எம்.



கால்ஷியம் சத்துக்
குறைவான எலும்புகள் பலவீனமானவை எளிதில் வலுவிழந்துவிடும்

# கால்ஷியம்-ஸாண்டோஸ்
# எலும்புகளுக்கு வலுவூட்டுகின்றது.



எலும்புகள் கண்களுக்குத் தெரிவதில்லை. இருப்பினும் அவை உங்கள் குழந்தைகளின் வளர்ச்சிக்கும் அபிவிருத்திக்கும் மிகவும் ஆதாரமானவை. கால்ஷியம் எலும்புகளுக்கும் பற்களுக்கும் இன்றியமையாத பகுதியாகும். கால்ஷியம் சத்துக் குறைவாக இருந்தால் அது பலவீனமான, எளிதில் நொறுங்கக் கூடிய எலும்புகளுக்குக் காரணமாகிறது அதனால் பற்கள் தளர்ச்சி அடைகின்றன. பற்களில் குழி விழுகிறது.

உறுதியான பற்களுக்கும் ஆரோக்கியமான எலும்புகளுக்கும் உங்கள் குழந்தைகளுக்கு 3 லிருந்து 4 வெனில்லா சுவையூட்டப் பெற்ற கால்ஷியம் ஸாண்டோஸ் வில்லைகளைக் கொடுங்கள். ஒவ்வொரு வில்லையிலும் கால்ஷியம், வைட்டமின்கள் ஸி.டி. மற்றும் பி 12ம் அடங்கியுள்ளன.

உங்கள் குழந்தை ஒவ்வொரு நாளும் கால்ஷியத்தை இழக்கிறது. இந்த நஷ்டத்தை ஈடு செய்ய வேண்டும். இல்லையேல் குழந்தையுடைய வளர்ச்சி பாதிக்கப்படுகிறது. சாதாரண உணவிலும் குழந்தைகளுக்குப் போதுமான கால்ஷியம் கிடைப்பதில்லை.

இன்றே உங்கள் குழந்தைக்கு கால்ஷியம் ஸாண்டோஸ் கொடுக்கத் தொடங்குங்கள். காலதாமதம் செய்யாதீர்கள். பின்னால் எவ்வளவு கால்ஷியம் கொடுத்தாலும் அந்த நஷ்டத்தை ஈடு செய்ய முடியாது.

நினைவிருக்கட்டும், கால்ஷியம் வில்லைகள் எல்லாம் ஒரே மாதிரியானவை அல்ல.

கால்ஷியம் ஸாண்டோஸ்—என்று வற்புறுத்தி வாங்குங்கள். வேறு எதையும் வாங்காதீர்கள்.

கால்ஷியம் ஸாண்டோஸ்—
உலகிலேயே மிகச் சிறந்த
கால்ஷியம்
ஸ்விட்ஸர்லாந்து
நாட்டில்
ஸாண்டோஸால்
உருவாக்கப்பட்டது



**கால்ஷியம்-ஸாண்டோஸ்®**
**வலுவுள்ள பற்களுக்கும்**
**உறுதியான எலும்புகளுக்கும்**




daCunha/S-25/TMR





ஆரோக்கியமான பற்களுக்கும் ஈறுகளுக்கும் என்றுமே ஆதாரம்
நம்பகமான கிராம்புத் தைலம் அது தருமே பரிகாரம்

புதிய

இதோ

# ப்ராமிஸ் டூத் பவுடர்

## காலங்காலமாக பயன்பட்டு வரும் கிராம்புத் தைலம் கொண்டது.

கிராம்புத் தைலம் கொண்ட
ப்ராமிஸ் டூத் பவுடர்
அளிக்கும் நன்மையைப் பாருங்கள்.

- வாய்த் துர்நாற்றத்தையும் பற்சிதைவுக்குக் காரணமான கிருமிகளையும் அகற்றுகிறது.
- உங்கள் சுவாசத்திற்கு புத்துணர்ச்சியையும் தூய்மையையும் தருகிறது.
- உங்கள் ஈறுகளை இதமாகத் தேய்த்துக் கொடுத்து ஆரோக்கியத்தை உண்டாக்குகிறது.
- உங்கள் பற்களுக்கு பளிச்சிடும் வெண்மையைத் தருகிறது.
- பெப்பர்மிண்ட் மற்றும் கிராம்புத தைலத்தின் இணையற்ற சுவை.




பல்சாரா

கிராம்புத் தைலம் கொண்ட புதிய இணையற்ற ப்ராமிஸ் டூத் பவுடர்

CHAITRA-BLS-438 TAM

மிரட்டல் இன்று அதிகம். ரமணிக்கு வேலையில் கவனம் ஓடவில்லை. செய்த ஒன்றிரண்டிலும் தாராளமாய்த் தவறுகள்.

யார் இந்த ஜாட்டான்? முகம் காண்பிக்காமல் மாயாவி மாதிரி வேலை செய்து கொண்டு? நேற்று வைஜயந்தியிடம் இது பற்றிப் பிரஸ்தாபிக்காமல் விட்டது தப்பா?

பீச் மணலைக் களமாக்கி, அஸ்தமனத்துக்குப் பின் நான்கைந்து முறை வைஜயந்தியைத் தரிசித்தாயிற்று. மெல்லப் பேசக் கொடுத்து, பெண்களின் இயல்புகளை அலசி, பின் வைஜயந்தியின் சொந்த எண்ணங்களிலும் நுழைந்தாயிற்று.

''ஹலோ... உன்னை மூணு தடவை வார்ன் பண்ணியும் நேத்து வைஜயந்தியோட தேராட்டல்ல உன்னைப் பார்த்தேனே. அடுத்த வாரம் கண்டிப்பா ஹாஸ்பிடலுக்குத் தான் போகப் போறே...''

''ஏண்டா நாயே... என் லவரோட சுத்தாதேன்னு சொன்னேனில்ல... காந்தி சிலை பக்கத்திலேயே உனக்குச் சமாதி கட்டணுமா?''

''பூவா வாங்கிக் கொடுக்கறே பொறுக்கி? வைஜயந்திக்கு என்னைத் தவிர பூ வாங்கிக் கொடுக்க யாருக்கும் யோக்யதை கிடையாது. தெரிஞ்சுக்கோ. அடுத்த தடவை உன் குடலை உருவி அவ தலைல வைக்கறேன் இரு....''

ரமணிக்குச் சலித்துப் போயிற்று. வெறும் மிரட்டல்கள்தான். குரைக்கும் நாய்தான். ஆனாலும் பூரணமாய் வைஜயந்தி பற்றி சந்தோஷப்பட விடாமல், இந்த முள் ஏன்?

ஆனால் வைஜயந்தியிடம் இது பற்றி மூச்சுக்கூட விடவில்லை அவன்.

போன் அலறிக் கொண்டிருந்தது.

ரமணி அசையாமல் இருந்தான். மானேஜரே ஓடிப்போய் எடுத்தார்.

''யாரோ லேடி வாய்ஸ்ப்பா...''

துள்ளி எழுந்தான் ''இருங்க சார்... இருங்க சார்... வச்சுடாதீங்க....''

ரிஸீவரைப் பிடுங்கினான்.

''ஹலோ, ரமணி ஹியர்.''

''வைஜயந்தி....''

''சொல்லுங்க....''

''ஆறு மணிக்கு வரேன்னு சொன்னேனே கொஞ்சம் லேட்டாகும் போலத் தெரியுது. வீ வில் மீட் அட் செவன்...''

''உழைப்பாளர் சிலை கிட்டத்தானே?''

''எக்ஸாக்ட்லி....''

''பேசாம இருந்தா என்ன அர்த்தம் வைஜயந்தி?''

''நிறையப் பேசணும்னு தோணுது. ஆனா என்ன பேசறதுன்னு புரியலை..... இன்னும் மிரட்டல் போன் வருதா ரமணி?''

குபுக்கென்று ரத்தம் உச்சி மண்டைக்கு ஏறிற்று.

''மிரட்டல் ஃபோன் பத்தி உங்களுக்கு எப்படித் தெரியும்?''

''நான்தான் பண்ணதே....''

''என்னது?'' அதிர்ச்சி ஒலியின் நிக்குரலில் பிறடித்தது.



பட்டி பேர் என்றொரு குத்துச்சண்டை பயில்வான் ''கோலாடிஸ்'' என்ற ஆங்கிலத் திரைப் படத்தில் வெறுங் கைகளால் ஒரு காளை மாட்டுடன் சண்டை போட்டுக் கொன்றார்.

மறுநாள் தயாரிப்பாளர்களிடமிருந்து ருசியாகச் சமைக்கப்பட்ட மாட்டிறைச்சி உணவு அவருக்கு வந்து சேர்ந்தது. அத்துடனிருந்த ஒரு கடிதத்தில் ''இது நேற்று நீங்கள் கொன்ற மாட்டின் இறைச்சி'' என்று எழுதப்பட்டிருந்தது.

பட்டி பேர் இறைச்சியைத் திருப்பி அனுப்பி விட்டார். அதற்கு அவர் கூறிய காரணம்:

''சக நடிகர்களைச் சாப்பிடும் வழக்கம் எனக்குக் கிடையாது!''

- கைலாஸ்

''ஆமா... என்னோட ஃப்ரெண்டு ஒருத்தன் ரெட்டின்னு ஆஃபீஸ்ல இருக்கான். முதல்ல விளையாட்டா உங்களுக்கு ஃபோன் பண்ணி மிரட்டச் சொன்னேன்... அப்புறம் ஒவ்வொரு தடவையும் அதே பழக்கமாப் போச்சு.... ஆனா அந்த மிரட்டலுக்கெல்லாம் கொஞ்சம் கூட அசைஞ்சு கொடுக்காம நீங்க ரெகுலரா என்னைப் பார்க்க வந்தப்போ எனக்கு என்னவோ போல ஆயிட்டது.... ஏதோ சாதாரணமாப் பழக ஆரம்பிச்சேனே தவிர இப்போ....''

''இப்போ....?'' ரமணிக்குக் குரல் தழுதழுத்தது.

''என்னை நானே ரொம்ப ஏமாத்திக்கிட்டேன் ரமணி.... காதல்ல நம்பிக்கை இல்லேன்னு சொன்னது மடத்தனமான வீம்புதானோன்னு தோண ஆரம்பிச்சுடுச்சு... என்னை அறியாமயே எப்பப்பார்த்தாலும் உங்க நெனைப்பாலே மனசு அலையுது...''

''வைஜயந்தி....''

''இவளுக்கு ப்ரின்ஸிபிள் இல்லேன்னு தோணுது இல்ல...? வெளில பேசினது ஒண்ணு, உள்ள வேற ஒண்ணுன்னு தெரியறச்சே ச்சீன்னு ஆயிட்டதில்ல...?''

''நோ நோ நோ...'' என்று பரபரத்தான் ரமணி.

''நாம கண்ணாமூச்சி ஆடியிருக்கோம் வைஜயந்தி... துணியால இறுக்கிக் கட்டிக்கிட்டுத் தெரியற கொஞ்சம் ஓட்டைல உன்னைப் பிடிக்கலாம்னு நான் பார்த்திட்டிருக்கறப்போ நீ என்னைப் பின்னால வந்து பிடிச்சுட்டே...?'' மணலில் புதைந்திருந்த அவளது கையை மெல்ல எடுத்துத் தன் கையில் கோத்துக் கொண்டு சொன்னான்:

''எனக்குக் காதல்லே நம்பிக்கையே இல்லை வைஜயந்தி....!''

## 25. கடைசி சான்ஸ்!

அந்த இடத்தில் கனேபரமாக இருக்கும் என்று எதிர்பார்த்தான். இல்லே. ஏதோ ஓர் அலுவலகத்தின் முன் அறை போல இருந்தது. ஒரு மேசை போட்டு அதன் மேல் வெளி நாட்டுக் காலண்டர் நட்டு வைத்திருந்தது. எதிரே திரைச்சீலையில் பச்சை பச்சையாக டிராகன் வேலைப்பாடுகள், ஒரு பெரியவரின் போட்டோ மாலை போட்டுப் பொட்டிட்டுத் தொங்கிக் கொண்டிருக்க வஸந்த் முதன் முதலாக அவனே ''வாங்க'' என்றவரைப் பார்த்தான். முப்பத்து ஐந்திருக்கலாம். தலை கலைந்திருந்தது. கண்களில் புன்னகை இருந்தது. கையில் ஒரு பற்றவைக்காத சிகரெட்டுடன் வஸந்தை நோக்கி லேசாகப் புன்னகைத்துக்கொண்டே வந்தான். ''என்ன வஸந்த் வியாபாரம் பேச வந்தீங்களா?''

''உண்மையைச் சொல்லப் போனா ஆமாம்!''

''என்ன வியாபாரம் தெரியுமா?''

''ஏறக் • குறையத் தெரியும்.''

''போலீஸைக் கூட்டிக்கிட்டு வந்திருக்கீங்களா?''

''போலீஸா?''

''மிஸ்டர் வஸந்த்! எங்களுக்கும் கொஞ்சம் புத்திசாலித்தனத்தை மிச்சம் வெச்சிருங்க. எங்களைப் பிடிக்கலாம்னு பிளான் பண்ணிக்கிட்டுத்தானே வந்திருக்கீங்க?''

''சேச்சே! எங்கம்மா மேலே ஆணையா அப்படியெல்லாம் இல்லே ஸார். உங்க பேர் தெரியலியே?''

''அருண்குமார்.''

''நீங்கதானே?''

''ஆமா. நாங்களேதான். ரொம்பக் கிட்டக்க வந்துட்டீங்க இல்லையா?''

''சேச்சே! அப்படியெல்லாம் இல்லையே. அருண்! இத பாருங்க. நான் வந்த விஷயம் ப்யூர் அண்ட் ஸிம்பிள் பிஸினஸ். பேரம் பேசறதுக்குத்தான் வந்தேன்.''

''அப்ப எதுக்கு இந்த அமெச்சூர்தனமான மாறுவேஷம்?''

''அது போலீஸுக்குப் பாச்சா காட்டறதுக்குத்தான்.'' அவன் முகத்தில் சலனம் நம்பிக்கை ஏதாவது தெரிகிறதா பார்த்தான்.

''மேலே சொல்லுங்க.''

''நோட்டுக்களை வாங்கறதுக்குத்தான் வந்தேன் அருண். என்கூட யாராவது வந்திருக்காங்களா நீங்களே செக் பண்ணிப் பாத்துருங்க. தனியாத்தானே வந்திருக்கேன். பார்த்துக்கங்க.''

''பார்த்தேன்! போலீஸ் பின்னால வரப் போவுது. அதும் தெரியும். ஆனா இந்த இடத்தை அவங்களாலே ஜென்மத்துக்கும் கண்டு பிடிக்க முடியாது. நிமிஷமா மாத்திப்புடுவோம். கொஞ்சம் உள்ளே வரீங்களா உங்களோட பேசணும்.''

வஸந்த் தயங்க, ''உங்களை மட்டும் நாங்க நம்பணும். நீங்க என்னை நம்ப மாட்டீங்க?'' என்றான்.

''சேச்சே! வரேன்.''

திரையைத் தள்ளிக்கொண்டு நுழைந்ததும் பிரமித்தான். ''இங்கதான் நடக்குதோ!''

''ஆமா! ஓரத்தில் சின்னதா ஒரு ஹீட்டல் பர்க் இயந்திரம் இருந்தது. காம்ப்பாக்ட்டான மிஷின். பத்து நிமிஷத்திலே டெம்போவிலே லோடு பண்ணிவிடலாம். லோடு பண்ணத்தான் போறோம். இன்னிக்கு எல்லாத்தையும் காலி பண்ணிடலாம்னு உத்தேசம். திங்ஸ் ஆர் கெட்டிங் ஹாட்!''

''நீங்க என்னைப் பொறுத்தவரை கவலையே பட வேண்டாம். எனக்காகக் காலி பண்ண வேண்டியதில்லே.''

''உங்களைப் பொறுத்தவரை கவலே இல்லே வஸந்த்! உங்களைத்தான் தீர்த்துக் கட்டிடலாம்னு இருக்கமே!''

''என்னது!''

''ஆமா! இங்க இருந்து எங்க பார்ட்டியோட சம்பந்தமில்லாதவங்க எங்க ரகசி



யத்தைத் தெரிஞ்சுக்கிட்டவங்க திரும்பிப் போறதில்லே, போகக் கூடாது. விடற தில்லே.''

''அப்படியா?'' என்றான் வஸந்த். அவன் முகத்தில் சலனம் ஏதும் இல்லே.

''உட்காருங்க. ஸாம்பிள் பார்க்கணும் னிங்களே பாக்கறீங்களா?''

அவன் சிகரெட்டை இப்போது பற்ற வைத்து, இழுத்து விட்டு, நிதானமாக அலமாரியைத் திறந்து, ஒரு பழுப்புக் கவ ரைப் பிரித்து, ஒரு நோட்டை உருவிக் காட்டினான்.

''இப்பத்தான் ஃப்ரெஷ்ஷா போட்டிருக் கோம். இன்னும் கொஞ்சம் உலர்ந்தா செரியாயிடும்.''

வஸந்த் அந்த நூறு ரூபாய் நோட்டை வாங்கிப் பார்த்து ''ரிமார்க்கபிள். நிஜ மாவே நீங்க தேர்ந்த கலைஞர் ஸார்! இது குற்றமோ சட்டப்படி நியாயமோ அநியா யமோ எப்படி. வேறு இருந்துட்டுப் போகட்டும். வேலே சுத்தம்!'' என்றான்.

''இதுவரைக்கும் ஒரு நோட்டு கண்டு பிடிச்சதில்லே மிஸ்டர் வஸந்த். பம்பாய், கல்கத்தா, டில்லி, ஆமதாபாத் எல்லா இடத் துக்கும் நம்ம சரக்குப் போயிருக்கு. வாட்டர் மார்க்கைப் பாருங்க!''

''ப்யூட்டிஃபுல்!''

''பேப்பரைக் கையால நிரடிப் பாருங்க.''

''அதே நிஜ நோட்டு உணர்ச்சி! எல்லாம் தண்ணியோட மகிமை!''

''தண்ணியா?''

''ஆமா, ராஜ ராஜன் கிணத்து ஸ்பெஷல் கெமிக்கல்கனிறல உங்க இன்டாக்ஸியோ பினாக்குகளே அலம்பறதினலதானே இக்க எஃபக்ட் வர்றது உங்களுக்கு!''

''அட! அதுகூடத் தெரியும் உங்களுக்கு!''

''அதுக்குத்தானே உக்கல் பக்கத்திலேயே வேலேயை ஆரம்பிச்சிருக்கீங்க!''

''இது எப்படி உங்களுக்குத் தெரிய வந் தது?''

''அந்த ரசாயன ஆராய்ச்சிக் கட்டுரையை நாங்களும் படிச்சோம்.''

''அதைத்தான் திரிச்சிட்டதா லேப்ரரி யில உங்களைத் தொடர்ந்த ஆசாமி சொன் ஞனே!''

''உலகத்திலே ஒரு காப்பிதானு அது? விசாரிச்சுட்டு வேறே காப்பி பார்த்துட் டோம்.''

''பரவாயில்லே! நல்லா சொந்தமா கண்டு பிடிச்சு இங்க வரைக்கும் வந்துட்டீங்க. ஆனு ஒரு தப்புப் பண்ணிட்டீங்க வஸந்த். தனியா வந்திருக்கக் கூடாது.''

''போலீஸோட வந்திருந்தா உங்களைச் சந்திக்கிற சந்தர்ப்பமே கிடைச்சிருக்காதே.''

''என்னதான் சோப்பு வெச்சாலும் உங்களே நான் விடப்போறதில்லே வஸந்த்!''

''என்னை செய்யறதா உத்தேசம்?'' என் முன் வஸந்த் கவலையுடன்.

''பயப்படாதீங்க. இந்தி சினிமாவிலே வர்ற மாதிரி சித்ரவதை எல்லாம் பண்ண மாட்டேன்.''

அவன் பேசிக் கொண்டே மேசையின் இழுப்பறையிலிருந்து ஒரு பிஸ்டலே எடுத்துக் காட்டினான்.

''கைக்கடக்கமா கச்சிதம்மா இருக்குறன் மனிவுப் பதிப்பு மாதிரி இருக்கே'' என்றான் வஸந்த். ''ஸார் என் கையெல்லாம் நடுங் கறதைப் பாத்தீங்களா!''

''ஸெல்ஃப் லோடிங்! ரீகாயில் ஏதும் கிடையாது. டபிள் ஆக்ஷன். நூறு அடி வரைக்கும்கூட எஃபக்டிவ்வா இருக்கு!''

''சைலன்ஸர் இருக்கா?''

''தேவையில்லே. இங்க சத்தம் போட்டா யாருக்கும் கேக்காது.''

''சுடுவீக்குமா ஸார்?''

''எது?''

''பிஸ்டல் ஷாட்!''

# வஸந்த்! வஸந்த்!



சுஜாதா

''அதிகம் வலிக்காதுன்னுதான் சொல்றாங்க.''

''நீங்க எப்படிக் கொல்றதா உத்தேசம்?''

''க்ளோஸ் ரேஞ்சில மார்பில!''

''ஷ்யூரா செத்திருவேனில்ல!''

''ஆமா.''

''என்னை பாதி உயிரா விட்டுட்டு என்னை வெஜிடபிள் ஆக்கிடாதீங்க. செய்யற வேலையைச் சுத்தமாச் செய்துருங்க.''

''கவலைப்படாதீங்க வஸந்த்! நான் அச்சடிச்ச நூறு ரூபாய்களைப் பார்த்தீங்க இல்ல? அதுபோல சுத்தமாச் செய்துருவேன். யாராலயும் கண்டு பிடிக்க முடியாம.''

''ஸார்! உங்ககிட்ட ஒரு ரிக்வெஸ்ட்.''

''என்ன?''

''என்னைத் தீர்க்கறதுக்கு முந்தி ஒரு கடைசி மரண ஆசை.''

''என்ன சொல்லுங்க.''

''உங்க ஒர்க்ஸ் பூராவும் பார்க்கணும். இந்த பிரஸ் மாத்திரம்தானா...''

''இல்லை. பேப்பர் ட்ரீட்மெண்ட்டும் இருக்கு பின் பக்கத்தில. அதுக்கும் இணைத்துத் தண்ணி உபயோகப்படுது.''

''நீங்க கெமிகல் இன்ஜினியரா?''

''இல்லை. பத்து வருஷம் இந்த ஃபீல்டில அனுபவம்.''

''நோட்டு அடிக்கிறதிலயா?''

''இல்லை. அச்சுத் தொழில்ல!''

''ஓ! பொதுவா கள்ள நோட்டுக்களை அல்ட்ரா வயலெட்ல பார்த்தா கண்டு பிடிச்சுறலாம்னு சொல்லுவாங்க.''

''நம்ம நோட்டு அதுகூட முடியாது. அதே இங்க்தான். கெமிக்கல் அனலிஸிஸ் பண்ணி.... இதுக்காக நாப்பதாயிரம் ரூபா செலவழிச்சேன் வஸந்த்.''

''அடடா! போட்ட காசை எடுக்க வேண்டாமோ? இந்த பிரஸ் என்ன விலை?''

''இது ஆறு லட்சம்.''

''ஓ.ஜி.எல்ல வாங்கினீங்களா? எப்படி இம்போர்ட் லைசென்ஸ் கிடைச்சது!''

''அதுக்குத்தான் அருணா என்டர்ப்ரைஸஸ் கம்பெனி வச்சு ஏஜன்ஸி பிஸினஸ் செய்யறோமே!''

''ஓ! அப்படியா? உத்தமம். ஆனா இதில வர்ற காசு மாதிரி ஆகுமா! ஒரு நூறு ரூபா நோட்டு அடிக்க உங்களுக்கு அடக்க விலை எவ்வளவு ஆகும்?''

''ஒண்ணு இருவது.''

''ஒரு ரூபா இருபது பைசா?''

''ஆமா.''

''அப்ப எட்டாயிரம் பர்ஸெண்ட் லாபம் இந்தத் தொழில்ல?''

''எட்டாயிரம் வராது. பத்துக்கு இருபதுன்னு கொடுக்கறப்ப நாலாயிரம் பர்ஸெண்ட்தான் விழும். ஆனா ரிஸ்க்கு?''

''வாஸ்தவம்தான். சும்மா சொல்லக் கூடாது'' என்றான். தொடர்ந்து: ''ரிஸ்க்கே இல்லை உங்க நோட்ல. யாராலயும் கண்டு பிடிக்கவே முடியாது. இதுவரை நோட்டில இருந்து கம்ப்ளெய்ண்ட் ஏதும் வந்ததே இல்லைன்னுதான் தெரியுதே!''

''இத பாருங்க வஸந்த்! பேசிக்கிட்டே இருந்தா உங்களோட டேஞ்சர்! நாங்க இன்



# சுடர் விடும் தீபக்!

உத்தரப் பிரதேச டென்னிஸ் ஆட்டக்காரர் தீபக் பார்க்கவா. ஆசிய ஜூனியர் டென்னிஸ் சாம்பியன் போட்டியில் வெற்றி பெற்ற முதல் இந்தியன் என்ற புகழைப் பெற்றிருக்கிறார்.

தீபக் பார்க்கவா அலகாபாத் சர்வகலா சாலையில் பட்டப் படிப்புப் படிக்கிறார். இவரது தந்தை நரேஷ் பார்க்கவா உத்தரப் பிரதேசத்தில் பெரும் பணக்காரர். இவருக்குச் சொந்தமாக சினிமாத் தியேட்டர் உண்டு. தீபக்கின் சகோதரர் அமித் பார்க்கவாவும் டென்னிஸ் ஆட்டக்காரர்தான்!

ஆசிய ஜூனியர் சாம்பியன் தீபக் பார்க்கவா ஒன்பது வயதில் டென்னிஸ் ஆடத் தொடங்கியவர். இந்தியாவில் பலரிடம் பயிற்சி பெற்ற பிறகு அமெரிக்காவில் உள்ள ஃப்ளாரிடாவில் ஹாரி ஹாப்மனிடம் சென்று ஆறு வாரங்கள் டென்னிஸ் பயிற்சி பெற்றிருக்கிறார். டென்னிஸில் சப் ஜூனியர் சாம்பியன் பட்டத்தை 1975–76ல் பெற்றார். பின்னர் படிப்படியாகப் பல வெற்றிகளைப் பெற்று அனைத்துக்கும் சிகரம் வைத்தாற் போல் அண்மையில் ஹைதராபாத்தில் ஆசிய டென்னிஸ் ஜூனியர் சாம்பியன் பட்டத்தைப் பெற்று மகத்தான சாதனை புரிந்தார். இந்த ஆசியப் போட்டி இந்தியன் டுபாக்கோ ஸ்தாபனத்தின் கூட்டுறவோடு நடைபெற்றது. தொடர்ந்து பல சர்வதேச ஜூனியர் பந்தயங்களில் கலந்துகொண்டு 'உலக ராங்க்' அடையும் துடிப்புடன் இருக்கிறார் தீபக் பார்க்கவா.

சர்வதேச டென்னிஸ் அரங்கிலும் முன்னணி நட்சத்திரமாகத் தீபக் பார்க்கவா சுடர் விடுவார் என்று எதிர்பார்ப்போம்!

— குண்டுமணி

# திருத்தலம் கண்டேன்!



● நீங்கள் ஒரு திருத்தலத்தில்வசிக்கிறீர்களா? அல்லது அண்மையில் ஒரு புனிதத் தலத்துக்குச் சென்று வந்தீர்களா? அப்படியானால் அது பற்றி பக்தி மணமும், இலக்கிய ரசமும் வரலாற்றுச் சிறப்பும், நகைச்சுவையும் மிளிர கல்கியில் இரு பக்கங்களுக்கு மேற்படாத அளவில் எழுதுங்கள்.

எந்த மதத்தவரும் எழுதலாம். புகைப் படங்கள் அனுப்பலாம். பிரசுரமாகும் கட்டுரைகள், புகைப்படங்களுக்கு வழக்கமான சன்மானம் உண்டு. தவிர, ஆறு மாதங்கள் சென்ற பின் பிரசுரமான 26 கட்டுரைகளில், முதல் இரண்டாவது மூன்றாவது பரிசுக்குரியவை நடுவரால் தேர்ந்தெடுக்கப்படும். முதல் பரிசு ரூ. 250; இரண்டாம் பரிசு ரூ. 150; மூன்றும் பரிசு ரூ. 100.

முதல் கட்டுரை ஆகஸ்டு முதல் வாரம் கல்கி ஆண்டுமலரில் பிரசுரமாகும்.

பிரசுரமாகாதவற்றைத் திருப்பிப் பெறப் போதிய தபால் தலை ஒட்டிய சுய விலாசமிட்ட உறையைக் கட்டுரையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். கடிதப் போக்குவரத்துக் கிடையாது. உறையின்மேல் ''திருத்தலம் கண்டேன்'' என்று குறிப்பிடவும்.

ஆசிரியர் கல்கி, சென்னை-600032

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

னும் மூணு மணி நேரத்தில இடம் மாறியாகணும். எல்லாத்தையும் காலி பண்ணிக்கிட்டுப் பாக்கி இருக்கிறதை பெட்ரோல் போட்டு எரிச்சுட்டுப் போகப் போறோம். உங்களோட அதிக நேரம் பேசிக்கிட்டிருக்க விருப்பமில்லே.''

அவன் துப்பாக்கியை எடுத்துத் தன் மேல் குறிபார்ப்பதை வஸந்த் கலவரத்துடன் கவனித்தான்.

''கொஞ்சம் இருங்க. ஒரு ரிக்வெஸ்ட். என்னை ஒரு ரூம்ல தள்ளிட்டு துப்பாக்கியை கைல கொடுத்துடுங்களேன். நான்பாட்டுக்கு அக்கடான்னு உங்களுக்குச் சிரமம் எதும் வைக்காமத் தற்கொலை பண்ணிக்கிடறேன்.''

''வஸந்த்! அப்படி ஏமாந்தவங்க இல்லே நாங்க.''

''நான் யார் கிட்டயும் சொல்லலே .என்னை விட்டுட்டா உங்க கோஷ்டிலே சேர்ந்துட்டு அங்கங்க மொபைல்ல நோட்டு தள்ளறேன்! வக்கீலுக்குப் படிச்சிருக்கேன். அப்பப்ப கேஸ் வந்தா அதையும் பார்த்துக்கறேன். அப்புறம் நல்லா கார் ஓட்டுவேன்...''

அவன் சிரித்துக் கொண்டே துப்பாக்கியை வஸந்தின் மார்புக்கு நேர் குறி பார்த்தான்.

''ஸார்! அருண் ஸார்! கடைசியா ஒரு சான்ஸ் கொடுக்க மாட்டீங்களா?''

''ஸாரி வஸந்த்! நீங்க ரொம்ப பார்த்துட்டீங்க!''

''இருங்க இருங்க. ஒண்ணுக்கு வருது.''

''அதெல்லாம் செத்ததுக்கப்புறம் போய்க்கங்க.''

''என்ன ஸார் நிஜமாவே சுடப் போறீங்களா? அய்யோ! ஜாக்கிரதை ஸார் வெடிச்சுறப் போறது ஸார்! எனக்கு இன்னும் கல்யாணம் ஆகலே. ஒரு பொண்ணைக் காதலிக்கிறேன். என் வாழ்க்கைல இன்னும் எத்தனையோ செய்ய வேண்டியது இருக்கு. உருப்படியா ஒரு செடிகூட நட்டு வைக்கலே. காண்டீன்ல நாப்பது ரூபா பாக்கி இருக்கு. ஜெண்டட் ஸிவிலைஸேஷன்னு வி. எஸ். நய்பால் புத்தகம் முப்பது பக்கம்தான் படிச்சிருக்கேன். மூகாம்பிகை கோயிலுக்கு ஒரு நடை போயிட்டு வரணும். ஸார்ஸார் ஸார்!''

வஸந்த் சொல்லி முடிப்பதற்குள் அந்தத் துப்பாக்கி ஒரு முறை டுப்க் என்று ஒலித்தது. அந்தக் குண்டு வஸந்தின் மார்பில் வலதுபுறத்தில் சுரீர் என்று குத்திப் பாய்ந்து உள்ளே பொதிந்து கொள்ள வஸந்த் முன்புறமாகக் கவிழ்ந்து விழுந்தான். மார்பைப் பிடித்துக் கொண்டதில் அவன் விரல்களின் ஊடே சற்றுத் தயக்கத்துக்குப் பின் ரத்தம் வழிந்தது. வஸந்த் வாய் திறந்து காற்றுக்குத் திணறினான். பேச முடியவில்லை. அவன் கண்களின் முன் எல்லாம் சுழற்சியாக இருந்தது. பல்பு வட்டமடித்தது. அந்த அருண் பிரசாதோ குமாரோ எவனோ சிரிப்புடன் அவனையே பார்த்துக் கொண்டிருப்பது லேசாகத் தெரிந்தது. வஸந்த் அவன் காலடியில் விழ,

''பெரியசாமி! பெரியசாமி!'' என்று அவன் கூப்பிட்டான்.

உள்ளே வந்த பெரியசாமி கீழே விழுந்து கிடந்த வஸந்தைப் பார்த்து ''கொன்னுட்டீங்களா?'' என்றான்.

''ஆச்சு! பெரியசாமி வான் வந்தாச்சா?''

''பத்து நிமிஷத்தில வந்துரும். இவனை... இதை என்ன பண்றது?''

''பின்பக்கமா வெட்டிப் புதைச்சுறலாம்.''

''நேரம் இருக்குதா?''

''ஏன்?''

''இவன் பின்னாடி போலீஸ் வர்றதுக்கு எத்தனை நேரமாகும்?''

''அப்ப போட்டுட்டுப் போயிரலாமா?''

''பிளேன் டிக்கட் ரெடியா இருக்கு. உடனே புறப்பட்டுடறதுதான் நல்லது.''

''பெட்ரோல் எவ்வளவு இருக்கு?''

''ஒரு டின்தான் இருக்கு. பத்தவெச்சுட்டு போயிறலாம்... இதோ வான் வந்துரும்.''

பெரியசாமி வஸந்தின் உடலை ஓரத்தில் தரதரவென்று இழுத்துப் போட்டான்.

''முதல்ல பிரெஞ்ச் சாமான்களை லோட் பண்ணிடு.''

''நீங்க கிளம்புங்க. நான் பார்த்துக்கறேன்.''

''இவனை என்ன பண்ணுவே?''

''குப்பையோட குப்பையா பெட்ரோல் ஊத்திப் பத்த வச்சுர்றேன்...''

அப்போது ஜன்னலுக்கு வெளியே ஜீப் வருவது தெரிந்தது. (தொடரும்)


என்னப்பா, குடிச்சுட்டு நடு ரோட்டுலே கலாட்டா?...
இது நீரோடு செல்கின்ற ஓடம் இதில் நியாயங்கள் யார் சொல்லக் கூடும்
ஒருவர் மீது ஒருவர் சாய்ந்து ஓடம் போல ஆடலாம்!


தண்ணீர் விட்டோ வளர்த்தோம்... இப் பயிரை 'தண்ணி'யால் காப்போம்!


குடிக்க ஒரு மனமிருந்தால் அவளை மறந்து விடலாம்.. அவளை மறக்க ஒரு மனமிருந்தால் குடித்து விடலாம்! ஆனால் இருப்பதோ ஒரு பாட்டில்! நான் என்ன செய்வேன்? வரா.. வரா..


தம்பிக்கு ஒரு பாட்டில்!.. அன்புத் தங்கைக்கு அரை பாட்டில்!













# சினிமா பாட்டில்... ...BOTTLE!



அவள் எப்படி இருப்பாள்?

நினைவைக் கசக்கிப் பார்த்தான் சகாதேவன். ஒன்றும் சரிவரத் தோன்றவில்லை. யார் யாரோ சினிமா நடிகைகளின் முகங்கள் தான் அணிவகுப்பாய் நினைவில் மிதந்தன.

எட்டு வருஷங்களில் அவளுடைய முகம் சுத்தமாய் நினைவிழந்து போய்விட முடியுமா? போய்விட்டது.

மேலேயிருந்து உறுமிக் கொண்டு இறங்கி வந்த லாரி ஒன்றுக்கு வழி விட்டுக் காரை ஓரமாக ஒதுக்கினான். கார் இன்ஜின் முரண்டு பண்ணி நின்று போனது. காலையில் புறப்பட்டதிலிருந்து இதே தொல்லை. இப்போது மலைப்பாதையில் நின்றுதொலைத்து விட்டது.

கதவைத் திறந்து வெளியே வந்தான்.

எதிரே பார்த்தான். அவனுக்கு நன்றாகவே வியர்த்தது. அந்தக் குளிரிலும்.

'மரணப் பள்ளம் — கவனமாக ஓட்டவும்' என்ற சம்பிரதாயமான மிரட்டல் போதாதென்று மண்டை ஓடும் பெருக்கல் எலும்புகளும் என்று படம் வேறு.

அருணா நினைவுக்கு வந்தாள். இன்று காலையில்தான் அவளைப் பற்றிய செய்தி கண்ணில் பட்டது. பாவிப் பெண், அவளுடைய முகம் தான் என்ன முயன்றும் நினைவில் வரவே மாட்டேன் என்று அடம் பண்ணுகிறது.

''...கிராமத்தைச் சேர்ந்த சமூக சேவகி அருணா மல்ஹோத்ரா நேற்று இரவு தன் அறையில் பிணமாய்த் தொங்கியது கண்டு பிடிக்கப்பட்டது. மரணத்தின் காரணம் கொலையா தற்கொலையா என்று...''

மறுபடியும் அந்தச் செய்திக் குறிப்பைக் கவனமாய்ப் படித்தான். அது கொலையானால் என்ன? தற்கொலையானால் என்ன? அவளுடைய சாவுக்கு நான்தான் காரணம் என்று வாய் விட்டுக் கதற வேண்டும் போல் இருந்தது.

'பாவி! இப்போது திருப்திதானே... உன்னுடைய கையாலாகாத் தனத்தினால் நான் ஒழிந்து போனேன். நிம்மதியாய் இரு...' என்று அருவமாய் நின்று அவள் வாழ்த்துகிற மாதிரி ஒரு நிழலாட்டம்.

# விஸ்வரூபம்




இன்னும் அரை மணி நேரத்தில், மலைச் சரிவுக் கிராமத்தில் அருணா மல்ஹோத்ரா என்கிற தேவதை பூரணமான இறுதி மரியாதைகளுடன் 'புறப்படத்' தயாராக வைக்கப்பட்டிருப்பாள். அவளுக்காக வாங்கி வைத்திருந்த மல்லிகை மாலையின் மணம் காருக்கு வெளியேயும் கிறங்கப் பண்ணியது.

பத்து நிமிடப் போராட்டத்துக்குப் பிறகு கார் புறப்பட்டுத் தொலைக்கிறேன் என்று உறுமிக் கிளம்பியது.

கார் சென்று கொண்டிருக்கிற போதே அவனுடைய சிந்தனை அருணாவை நினைவுக்குக் கொண்டுவரப் படாத பாடு பட்டது.

குளுகுளுவென்ற மலைப் பிராந்தியம். போஸ்ட் மார்ட்டம் ஆகி உடல் கிடைத்திருந்தால்கூட அவளை அதற்குள் அடக்கம் பண்ணியிருக்க மாட்டார்கள். கடைசி கடைசியாக அவளைப் பார்த்து—

''இனிமேல் என்னை வந்து பார்த்து மாலை போட்டு என்ன செய்யப் போகிறாய் தேவன்?''

தன்னிச்சையாய்க் கார் விலக்குப் பாதையில் திரும்பி நிற்கிறது. வெள்ளை வெள்ளையாய்க் கட்டடங்கள். மலை நிலத்தின் அழகு தேவதைகளான மரங்களைப் பிடுங்கி எறிந்து விட்டு வெறும் கட்டடங்களையே நட்டு வைத்திருந்தார்கள். இன்னும் மூன்றே நிமிடத்தில் அந்த வீட்டை அடைந்துவிடலாம்.

அதற்குள் ஒரு முறையேனும் அவளை நினைவுக்குக் கொண்டு வந்து பார்த்து விட வேண்டும். காரை நிறுத்திவிட்டுக் கீழே இறங்கினான். பள்ளத்தில் ஒரு வீட்டின் முன்னால் கூரே நிறைந்திருந்தது.

'வாருங்கள்... வந்து என்னை உங்களுடையவளாக உரிமைப்படுத்திக் கொள்ளுங்கள்...

'என்னை யாரோ கொன்றுவிடப் போகிறார்கள்... எனக்கு நிச்சயமாய்த் தோன்றுகிறது. கனவோ பிரமையோ இல்லை...நிச்சயம் நான் சாகத்தான் போகிறேன்.அதற்குள்...'

அந்தக் கடிதத்தை ஒரு முறை நினைவுக்குக் கொண்டு வர முயல்கிறான். அருணா—அவளுடைய முகம் மட்டும்....?

வானத்தில் மேகக் குழப்பங்கள். அதுவே ஒரு விந்தையாய், சுழன்று ஆர்ப்பரிக்கும் மேகங்களிடையே ஒரு முகம்... தெளிவில்லாத முகமில்லாத முகம். தலைவிரி கோலமாய் ஒரு முகம்...

'ஓ....அருணா....'

விண்ணுக்கும் மண்ணுக்குமாய் விசுவரூபமெடுத்து அவள் நிற்கிறாளா? பாதி மேகம்... பாதிப் பசுமை... இது என்ன ஒரு வித்தியாசமான மெர்மெய்ட் மாதிரி....

**ம**ல்லிகை மாலையைக் கையில் எடுத்துக் கொண்டு படிகளில் இறங்கினான் சகாதேவன்.

வீட்டை நெருங்க நெருங்க அவனுடைய கால்கள் துவண்டன.

மௌன அஞ்சலியாய்க் கண்ணீர் மலர்களைச் சொரிந்து கொண்டு அருணா மல்ஹோத்ராவின் அருகே அந்தக் குழந்தைகள் நின்றிருந்தன.

அவளுடைய தோற்றப் பொலிவு மரணத்தில் இன்னும் கூடுதலான சோபையுடன்

நிகழ்ந்தது. மாலையை மெல்ல அவள் காலடியில் வைக்கப் போனபோது யாரோ அவனைத் தடுத்தார்கள்.

மாலையை அவன் மார்பில் புரளுகிற மாதிரி போட்டுவிட்டு அவன் வெடித்தான்.

''நீங்கள்....?''

''சகாதேவன். கோயம்புத்தூரிலிருந்து வருகிறேன்.''

''மிஸ்டர் சகாதேவன்! நீங்கள் எங்களோடு வரவேண்டும். அருணா மல்ஹோத்ரா கொலை செய்யப்பட்டாள். தெரிந்துதான் வருகிறீர்களா?''

அவன் அவ்வளவு அதிர்ச்சி யடையவில்லை. ''ஓரளவு ஊகித்தேன். ஆனால் நான் வந்தது செய்திப் பத்திரிகைக் குறிப்பைப் பார்த்துவிட்டுத்தான்.'' என்று சொல்லிக்கொண்டே அந்த ஆங்கிலச் செய்தி ஏட்டை அவரிடம் கொடுத்தபோது அவர் அதை, ஏன் அவனைக் கூட லட்சியம் பண்ணவில்லை.

நடந்தான். சற்றே திரும்பி அவளுடைய முகத்தைப் பார்த்தான். எட்டு வருஷத்தில் ரொம்பவும் மாறிப்போன மாதிரி தோற்றம்.

'அன்றைக்கே என் விருப்பப்படி நாம் கல்யாணம் செய்து கொண்டிருந்தால் இன்றைக்கு இப்படிச் செத்துக் கிடக்க மாட்டேனே....'

காவல் நிலையத்தில் அவனை உட்காரச் சொன்னார்கள்.என்னென்னவோ கேட்டனர். குறித்துக் கொண்டார்கள்.

''மிஸ்டர் தேவன், நீங்கள் இங்கே வராமலிருந்தாலும் நாங்களே உங்களைத் தேடி வந்திருப்போம். உங்களைப் பற்றிய சகல விவரங்களும் மிஸ் அருணா மல்ஹோத்ராவின் குறிப்பேட்டில் இருக்கின்றன. தன்னை யாரோ கொன்றுவிடப் போவதாகவும் எழுதிவைத்திருக்கிறாள். உங்களுக்கு ஏதேனும் தகவல் உண்டா... இது 'ஸ்டிராங்குலேஷன்' கேஸ். மெல்லிய கயிற்றை இறுக்கிக் கழுத்து நெறிபட்டு மரணம். அப்புறம் தொங்க விட்டிருக்கிறார்கள். இரண்டு பேர் சம்பந்தப்பட்டிருக்கலாம் என்று தெரிகிறது.''

''இன்ஸ்பெக்டர்! நான் அருணாவைப் பார்த்தே எட்டு வருஷங்களாகி விட்டன. போன மாசம்தான் நான் கோயம்புத்தூர் வந்தேன். போன வாரம்கூட அவளிடமிருந்து எனக்குக் கடிதம் வந்தது. அதில்தான் எனக்கும் எழுதியிருந்தாள், தன்னை யாரோ கொன்றுவிடப் போகிறார்கள் என்று. நான் வெறும் பிரமையாய் இருக்கும் என்று நினைத்தேன். நிஜமாகவே...'' அவனால் மேலே முடிக்க இயலவில்லை.

''இன்ஸ்பெக்டர்! இது வெறும் கொலை தானா இல்லே வேறே ஏதாவது?''

''மிஸ்டர் தேவன்! உங்கள்கேள்விக்கு விடை இருக்கிறது. ரேப் அண்ட் மர்டர்தான்.''

அவன் குமுறினான். இது இரண்டாவது முறையா... 'கடவுளே' என்று கதறினான்.

என்ன என்கிற மாதிரி இன்ஸ்பெக்டர் நிமிர்ந்தார். ''இது உங்களுக்கு உதவலாம் இன்ஸ்பெக்டர். மிஸ் அருணா ஏற்கனவே ஒரு முறை இப்படி....''

''யெஸ்... புரொஸீட்...'' என்று இன்ஸ்பெக்டர் நிமிர்ந்து உட்கார்ந்து குறித்துக் கொள்ளத் தயாரானார்.

சொன்னான். அந்த மழை இருட்டில் அவளும் அவனும் கல்வெட்டு ஆராய்ச்சிக்காகப் போன இடத்தில் எட்டு வருஷங்களுக்கு முன்னால் நடந்ததைச் சொன்னான்.

''அவன் எங்கள் நண்பன்தான்... அப்போது போலீஸுக்குப் புகார் தரவில்லை. அருணாதான் வேண்டாம் என்று பிடிவாதம் பிடித்துத் தடுத்தாள். அவன் அப்போது ஊரை விட்டு ஓடிப் போய்விட்டான்.''

''பெயர்... விவரம்?''

''கிருஷ்ணகாந்த் சர்மா என்று பெயர். அவனும் இப்பொழுது எங்கேயோ லாயராகத்தான் இருக்கிறான். அவன்தான் இப்பவும் என்று எப்படி இன்ஸ்பெக்டர் சொல்ல முடியும்? அதுவும் எட்டு வருஷமாகிவிட்டது''

''மிஸ்டர் தேவன்... அது உங்கள் கவலை இல்லே. மிஸ் அருணா அன்றைக்கு அப்படி ஆனதுதான் நீங்கள் கல்யாணம் செய்து கொள்ளாமல் இருக்கக் காரணம் இல்லையா?''

''ஓரளவு உண்மை இன்ஸ்பெக்டர்... ஆனால் மனசு கொஞ்சம் சமாதானமானதும் —ரெண்டு பேருக்குமேதான் — கல்யாணம் பண்ணிக்கலாம் என்று காத்திருந்தோம். நடுவிலே நான் ஜெர்மனி போய்விட்டேன்.''

இன்ஸ்பெக்டர் சிரித்தார். ''எதற்கும் இருக்கட்டும். ஒரு ஸ்டேட்மெண்ட் எழுதிக் கொடுத்து விடுங்கள். உங்கள் சாட்சியமும் தேவைப்படலாம்'' என்றார்.

அவசரம் அவசரமாய் அவன் எழுதிக் கொடுத்தான். ''நான் கோயம்புத்தூரில் தான் இருப்பேன்... இன்னும் பதினைந்து நாள்... அப்புறம்...''

''அவ்வளவு தேவையில்லைமிஸ்டர் தேவன்! இன்னும் மூன்று நாட்கள். ஆள் எங்கள் கையில் சிக்குகிறான் பாருங்கள்.''

சகாதேவன் சிலிர்த்துக் கொண்டான்.

சவ அடக்கம் முடிகிறவரை ரொம்பவும் பொறுமையாய் இருந்தான். அவனுக்கே ரொம்ப வியப்பாக இருந்தது. எப்படித் தன்னால் அவளைப் பார்த்துக் கொண்டு அவ்வளவு நேரம் நிற்க முடிந்தது?

சாயங்காலம் நாலரை மணி. பள்ளங்களில் இருள் நிரம்பி மூடு பனி கும்பல் கும்ப

அவர்: உங்க நாட்டியப் பள்ளி நன்றாக நடக்குதா?

இவர்: நடக்கிறதாவது! மாணவிகள் குறைந்து போய் நாட்டியப் பள்ளி ஆடவே செய்கிறது! — கல்கத்தா 'மிக்கி'



# தாமதமேன், தருணமே கண்டுகொள்வீர் தரத்தில் உயர்த்தியான காலமைன்.






# புதிய லக்மே காலமைன்

- உயர் வண்ணச் சாயல்கள்.
- உயர்த்தியான நறுமணம்.
- உயர்த்தியான பரவல் திறம்

மூவகைச் சரும நிறங்களில் வருவது லக்மே காலமைன் ஒன்றுதான்.

லகுவாக சருமத்தோடு இழைந்திடும் லக்மே காலமைன்

மென்மணம் கமழ்கிறது லக்மே காலமைன். உயர்த்தியிலும் உயர்த்தியானதே உகந்தது உமக்கு : லக்மே காலமைன்.

எழிலோடு மருந்திழையும் முழு நாள் முலாம்.

# Lakmé

daCunha/L/59/R/TM




# அழகுராணி! சுகந்தராணி!!

மெடிமிக்ஸ் உங்கள்
மேனியை பாதுகாப்பதோடு,
அழகாகவும் வைக்கிறது.
மெடிமிக்ஸ் உங்களை
அழகுராணியாக மாற்றுகிறது.
மெடிமிக்ஸ் உங்களுக்கு
வெள்ளை ரோஜாவின்
பரவசமூட்டும் மணத்தைக்
கொடுக்கும் சுகந்தராணி.

## மெடிமிக்ஸ்

ஆயுர்வேத டாய்லட் சோப்பு

- முகப்பரு
- தேமல்
- கரும்புள்ளி
- சொறி
- வேர்க்குரு
- வண்ணான் படை
- சிரங்கு
- கரப்பான்

CHOLAYIL PHARMACEUTICALS MADRAS-600011

MOD 11 CP-S

# அறுவை சிகிச்சை இன்றி மூலத்தை சுருக்குவீர் நமைச்சலையும் வலியையும் அபூர்வ மருந்தால் விரட்டுவீர்

நியூயார்க்—மருத்துவ விஞ்ஞானத் துறை இப்போது பெருமளவில் மூலநோயை அறுவை சிகிச்சை இன்றி சுருக்கும் ஒரு மருந்தைக் கண்டு பிடித்துள்ளது. மூல நோயால் ஏற்படும் வலியும் நமைச்சலும் நீங்கி, அதி விரைவில் மூலம் சுருங்கி குண மேற்பட்டிருப்பதை டாக்டர்களின் பரிசோதனைகள் நிரூபித்துள்ளன. பல ஆண்டுகள் மூலநோயால் துன்புற்றோர் கூட, "மூல நோய்ப் பிரச்சனை முடிந்து விட்டது" என்று மகிழ்வதாக கூறப்படுகிறது.

இப் புதிய மருந்தான ப்ரெபரேஷன் எச் களிம்பு, மூலத்தை சுருக்க உதவுவதோடு, நமைச்சலை நீக்கி வலியைத் தணிக்கிறது; மலப் போக்கின் போது வலியைக் குறைத்து எளிதாக்குகிறது.

ப்ரெபரேஷன் எச், இடும் குழாயுடன், 30 மற்றும் 50 கிராம் ட்யூபுகளில் எல்லா கெமிஸ்ட்டுகளிடமும் கிடைக்கிறது.

* Regd. User of TM: Geoffrey Manners & Co. Ltd.

252-PH 92 TAM

லாய் மிதக்கத் தொடங்கி விட்டது. காரைக் கிளப்பினான்.

அவனுடைய மனம் இப்போது லேசாய் இருந்தது. வரும் வழியெல்லாம் நினைவுக்கு வராத அருணா மல்ஹோத்ராவின் முகம் நிரந்தரமாய் நெஞ்சில் தேங்கியது. அது நிம்மதியா சங்கடமா?

''பாவி! உன் கவலை தீர்ந்தது. போ, நிம்மதியாய் எங்காவது ஒழி...''

திரும்பிப் பார்த்தான். பின் ஸீட்டின் வெறுமை அவனை மிரட்டியது. ஒரு குலுக்க லில் சரியவிருந்த காரைச் சரிப்படுத்திப் பாதையைக் காட்டினான்.

பதினைந்து நிமிடங்களில் அதே இடம்... 'மரணப் பள்ளம்... கவனமாக ஓட்டவும்...' மண்டை ஓடும், பெருக்கல் எலும்புகளும்...

இன்னும் ஒரு ஹேர் பின் வளைவில் கீழே இறங்கிவிட்டால் — அப்புறம் பாதுகாப்பான நெடுஞ்சாலைப் பயணம்தான்.

பாதுகாப்பு — எல்லாவற்றிலும்தான்... சனியன் பிடித்த கார்.. அந்த மண்டை யோட்டுப் பெருக்கலின் கம்பத்தில் மோதி நின்றது.

''கீழே பார்த்தாயா... தூள் தூளாய் உன்னையும் வாரிப் போட்டுவிடுவேன்''— என்று மிரட்டியது.

மாலை வெய்யில் பனிப் படலத்தை விரட்டிச் சிரித்தது. மறுபடியும் மேகங்கள் சுழன்று சுழன்று அந்த மலைப் பகுதியை ஆக்கிரமித்தன.

சிகரெட்டை எடுத்துப் பற்றவைத்தான். மறுபடி புகை வளையங்கள்... விண்ணுக்கும் மண்ணுக்குமாய் அவனுடைய தோற்றம்... மறுபடி விசுவரூபம்... மேகங்களே முகமாய் கூந்தலாய் உடம்பாய்....

''என்ன மிரட்டுகிறாயா?''

பாதை ஓரத்தில் காரை விட்டு இறங்கிக் கீழே பார்த்தான். அப்படிப் பார்த்திருக்கக் கூடாது சகாதேவன். அப்படியே தலை சுற்றிச் சரிந்து... கீழே கீழே.. பள்ளத்தில் மோதிச் சிதறினான்.

அருணா உயிருடன் உள்ளவரை தனக்கு நிம்மதி இல்லை என்று முடிவு செய்து விசுவாசமான ஆட்களை ஏவி அவளை முடித்த பிறகும் அவனால் தப்ப முடியாமல் போனது. சட்டம் விழிப்புற்று அவன் அகப்படும் வரை அருணாவால் காத்திருக்க முடியவில்லை. அவளுடைய விசுவரூபம் கதையை முடித்து விட்டது.

அங்கே—

இன்ஸ்பெக்டரின் முன்னால் டீக்கடை நாயர் ஒரு சின்னக் காகிதத்தைக் கொடுத்து என்னவோ சொல்லிக் கொண்டிருந்தான்.

''எசமான்! ரண்டு ஆளுக முந்தா நாளு காலேலே சமூக சேவகி அம்மா வீடு எங் கேன்னு கேட்டாங்க.. அவுங்க கொண்டு வந்த கடிதாசுங்க இது...''

அந்த முகவரிக் கையெழுத்தை வைத்து இன்ஸ்பெக்டர் மேலே புருவத்தை உயர்த்திய போது—

அங்கே சகாதேவனின் ரத்தத் துளிகள் திட்டுத் திட்டாய் மலைப் பாறைகளில் உறையத் தொடங்கி யிருந்தன!



அருள்வாக்கு

## அழிவில்லாத அன்பு

மனிதனாயிருந்தாலும் மிருகமாயிருந்தாலும் பறவையாக இருந்தாலும் உயிரினங்கள் யாவற்றின் மீதும் மனிதன் அன்பு செலுத்தப் பழக வேண்டும். அன்பில்லாத வாழ்க்கை வீண் வியர்த்தமே. எல்லோரிடத்தும் அன்பு செலுத்தும் தன்மை நம்மிடம் நிறைந்திருந்தால் துக்கத்துக்கே இடமில்லை. குழந்தைகளைப் பாருங்கள். அவர்களிடம் அன்பு பொங்கி வழிகிறது. ஆனால் வயது ஆக ஆக அவர்களுடைய அன்பு குறைய ஆரம்பிக்கிறது. அன்பு என்பது என்ன? ஒரு தாய் தன்னுடைய குழந்தையிடம் காட்டும் அன்பை இதற்கு உதாரணமாகச் சொல்லலாம். பெற்றோரிடம் பற்றில்லாத பிள்ளைகளை உலகத்தில் பார்க்க முடியும். ஆனால் தன் குழந்தையிடம் பாசமில்லாத தாயைப் பார்க்கவே முடியாது. தாய் தன் குழந்தையிடம் காட்டும் அன்பைப் போலவே நம்முடைய சுகத்தைவிட மற்றவர்களுடைய சுகம்தான் அதிக முக்கியமானது என்று நினைக்கத் தயாராக இருக்க வேண்டும்.

இந்த அன்பில் வேதனையும் இல்லாமலில்லை. ஏனெனில் ஆரம்பம் என்றிருந்தால் அதற்கு முடிவும் இருக்க வேண்டுமென்பது பொது விதி. நாம் மிகுந்த அன்பு வைத்துள்ள ஒருவர் மரணமடைந்து விட்டால் ரொம்ப மன வேதனை அடைகிறோம். இதற்காக நாம் அன்பை வளர்க்கக் கூடாது என்று சொல்ல முடியுமா? ஆனால் அழிவில்லாத அன்பு என்றிருக்கிறது. அதைப் பழகிக் கொண்டால் வேதனைக்கே இடமில்லை. அதுதான் கடவுளிடம் அன்பு செலுத்துவது. அழிவில்லாத கடவுளிடம் செலுத்தும் அன்புக்கு அழிவேது?

—காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்

# கல்லில் மலர்ந்த காவியம்: 1

# பேரூர்

கொங்கு மண்டலத்தில் கோயம்புத்தூருக்கு அருகில் காஞ்சி ஆற்றின் கரையில் உள்ளது பேரூர். மேலைச் சிதம்பரம், பிறவாநெறி என்ற பெயர்களும் இதற்கு உண்டு. இங்குள்ள ஆலயத்தில் கலைவளமும், கற்பனை நலமும் செறிந்த சிற்பங்கள் பல வுண்டு. அளவாலும், தரத்தாலும் பெரியவை.

ஊர்த்துவ தாண்டவ மூர்த்தியும், கஜசம்ஹார மூர்த்தியும் பிக்ஷாடனரும் காணத்தக்கவை. கஜசம்ஹாரரும் பிக்ஷாடனரும் ''எண்டோளீசன்'' என்ற பெயருக்கு ஏற்ப எட்டெட்டுக் கரங்களுடன் காட்சியளிக்கின்றனர். ஆனுல் ஊர்த்துவ தாண்டவர் மட்டும் பதினறு கரங்களுடன் விளங்குகிருர். எட்டு திசைகளை



மட்டுமின்றி பதினறு கோணங்களையும் ஆக்கிர மித்துக் கொண்டிருப்பதையே அவை நமக் குணர்த்துகின்றன. ஊன்றிய திருவடி பூவுலகையும், மேல் நோக்கிய திருவடி வானுலகையும் ஆக்கிரமித்துக் கொண்டுள்ள தையும் உணர்த்துகின்றன.

ஊர்த்துவதாண்டவருக்கு இடப்புறத்தில் திருமாலும், வலப்புறத்தில் பிரமனும் நிற்கின் றனர். பிரமனுக்கு ஐந்து தலை காணப்படுகிறது. தக்கன் வேள்வியில்தானே பிரமனுடைய தலை ஒன்று கொய்யப்பெற்று நான்முகனுனன்? அதற்கு முன் இத்தாண்டவம் நடந்தது என்பதைக் குறிப்பிடவே இந்த அமைப்பு.

### காரைக்கால் அம்மையார்:

சிவனருளால் மாங்கனி பெற்ற புனிதவதி என்னும் பெருமாட்டியே காரைக்கால் அம்மையார். சிவன் காலடியில்-பேய் ரூபமாக இருக்கவேண்டும் என்று வரம் கேட்டுப் பெற்ருர். பேய் வடிவம் கொண்டாலும் நாயன் மார்களில் ஒருவராக ருத்திராட்சம் அணிந்து தெய்வீகக் களையுடன் விளங்குகிருர்.

சிவபெருமான் அருளிய வண்ணம் திருவாலங் காட்டில் அவன் திருநடனம் கண்டு அவனடி நிழலில் இன்புற்றிருந்தார். அந்தக் காட்சியையே இங்கும் காண்கிறேம்.

இதேபோன்ற மற்ற சிற்பம் கம்போடியாவில் மாத்திரமே உண்டு. ஆனுல் அம்மையாரின் இந்த அழகு இல்லை.

நமது முன்னேர்கள் நமக்குப் பரம்பரைச் சொத்தாக அளித்துவிட்டுச் சென்றுள்ளது இந்த கலைப் பொக்கிஷங்கள். இன்றைய மதிப்பீட்டில் இச் சிற்பங்கள் பல கோடி ரூபாய்க்குச் சமம். இந்த அரிய பொக்கிஷத் தைக் கட்டிக் காப்பாற்றிப் போற்றி, வரும் தலைமுறையினருக்கு அளிப்பது நம் கடமை; நமது பண்பு.

தலைமுறை தலைமுறையாக வந்த கலைப் படைப்பின் அடிப்படை தூய்மை என்னும் பக்தியும், நேர்மை என்னும் சக்தியும்தான்! அந்த அடிச்சுவட்டைப் பின்பற்றுவது நமது லக்ஷ்மி மில்ஸ். ''செய்யும் தொழிலே தெய்வம்; அதில் நேர்மையே நமது செல்வம்'' என்ற குறிக்கோளுடன் மக்களுக்குச் சேவை புரிவதையே தலையாய கடமையாகக் கொண்டு விளங்குவது நமது லக்ஷ்மி மில்ஸ்!



**லக்ஷ்மி மில்ஸ்**
**கம்பெனி லிமிடெட்**
**கோயம்புத்தூர்**

# ஜோக் எழுதுகிறோம்

## போட்டி முடிவு

கார்டூனிஸ்ட் உமாபதி எழுதிய ஜோக்குகளின் முழு வடிவம்:



- மூக்கைப் பாரு மூக்கை... எப்படி இருக்கு தெரியுமா?
- மல்லாக் கொட்டையாட்டம்!



- பிரதமர் வெட்டுவது எதைக் குறிக்கிறது தெரியுமா? மின்சார வெட்டை!
- பெண்ணின் கையில் இருக்கும் தட்டு எதைக் குறிக்கிறது தெரியுமா? பண்டங்களின் தட்டுப்பாட்டை!



- இந்த மாதிரி மீசை எப்படி வளர்க்கிறது?
- ஐயய்யோ! நான் சொல்ல மாட்டேன். நீங்களும் வளர்த்தால் டயானு அம்மாவுக்கு இடைஞ்சலாப் போயிடும்!

இந்த மூன்று ஜோக்குகளின் முழு வடிவத்தையும் சரியாக யூகித்து எழுதியவர்யாருமில்லை.

இரண்டு ஜோக்குகளின் முழு வடிவத்தைச் சரியாக யூகித்து எழுதியவர் ஒருவரே.

**திரு வி. பஞ்சாபகேசன்,**
23-3, ராஜாமணி காலனி,
திருச்சி-20.

இவர் பரிசுத் தொகையான ரூ. 500ல் மூன்றில் இரண்டு பாகமான ரூ. 333 பெறுகிறார்!

ஒரே ஒரு ஜோக்கின் முழு வடிவத்தைச் சரியாக ஊகித்து எழுதியவர்கள் 47 பேர். இவர்கள் ரூ. 500ல் மூன்றில் ஒரு பங்கு தொகையான 167 ரூபாயைத் தங்களுக்குள் சமமாகப் பகிர்ந்து கொள்கிறார்கள்.

1. ஆர். செங்கல்நாராயண், நெய்வேலி-1. 2. சாவித்திரி கோபாலன், பம்பாய்-63. 3. மலர் மடந்தை, பெங்களூர்-53. 4. கே. நடராஜன், சிக்கந்திராபாத். 5. ஆர். கல்தான், கோயில்பட்டி. 6. கு. ராஜராஜன், தஞ்சாவூர்-9. 7. ஸ்ரீமதி பத்மா தாமோதரசாமி, கோவை. 8. மிஸ் ஜோதி சுப்பிரமணியன், சென்னை-18. 9. ஸ்ரீமதி என். விஜயலக்ஷ்மி, சென்னை-17. 10. ஆர். ராமமூர்த்தி, சென்னை-94. 11. கா. க. சிவம், சென்னை-7. 12. விசு லலிதா, பெட்டவாய்த்தலை, திருச்சி. 13. எஸ். கோபாலகிருஷ்ணன், தூத்துக்குடி 14. ஸ்ரீமதி கீதா ரவிச்சந்திரன், புதுதில்லி. 15. ஸ்ரீமதி எம். எஸ். மகேஸ்வரி, ராஜபாளையம். 16. வை. க. அனுராதா, நெய்வேலி-3. 17. ஆர். நெடுஞ்செழியன், டோம்புலிவ்லி, தாணு. 18. சை. நூர்பாஷா, பொள்ளாச்சி. 19. ரா. ஜூர்துசாமி, சென்னை-15. 20. சி. பூபால் சிங், சென்னை-35. 21. விலாசமில்லை.

22. ஆர். ரவி, சென்னை-33. 23. கே. வனஜா, சென்னை-18. 24. ஆர். ஜின்னு, சென்னை-83. 25. பி. முரளி, கோவை. 26. எஸ். சந்திரசேகர், பம்பாய்-71. 27. கே. கணபதிராமன், பம்பாய். 28. இரா. இராஜாமணி, விருதுநகர். 29. ஸ்ரீமதி பி.வி இந்திரா, தர்மபுரி. 30. ஸ்ரீமதி லக்ஷ்மி சுந்தரம், கல்கத்தா-29. 31. வி. எம். தர், சென்னை-17. 32. வி. பி. சீதாராமன், கல்கத்தா. 33. எம். ஏ. ஜீவன், கோவை. 34. லோ. மாலதி, ஆதிச்சமங்கலம். 35. ஆர். நந்தகோபால், திருச்சி. 36. முத்து தங்க ஐயப்பன், சுப்பராஜநகர், போடி. 37. எஸ். தனலக்ஷ்மி, பெங்களூர்-11. 38. என். பட்டாபிராமன், சென்னை-44. 39. பி.வி. அசோகன், கொசவம்பட்டி. 40. ரெ. மோகன், மதுரை. 41. ஸ்ரீமதி கீதா விசுவநாதன், பாலக்காடு. 42. ஏ. மோகன், புதுதில்லி. 43. வி. கோ. கோபாலகிருஷ்ணன், சென்னை-45. 44. அ. சிவசங்கர், கே. கே. புதூர், கோவை. 45. டி.எம்.எஸ். மணி, சென்னை-86. 46. டி. ஜோசப் ஜகந்நாதன், செங்கல்பட்டு-2. 47. எம். புஷ்பராஜ், சென்னை-12.

# ஸ்ரீவேணுகோபாலனுக்கும் புஷ்பா தங்கதுரைக்கும் என்ன வித்தியாசம்?



※ புலவர் தொல்காப்பியன், தஞ்சாவூர்

கே. கட்டுப்பாடுகளுக்கு உட்படாமல் கவிதை எழுதினால் தப்பொன்றுமில்லை என்கிறீர்களே, வரம்பிற்குள் நின்று எழுதி விட்டால் உயர்ந்ததாகி விடாது எனில் வரம்பு மீறி எழுதுவதிலேயே அது புது கவிதையாகி விடுமா? உயர்ந்ததாகி விடுமா?

ப: உங்கள் முழுக் கேள்வியில் கோபம்தான் தலைதூக்கி நிற்கிறது. விதிகளை மீறிய ஒரே காரணத்தால் புதுக் கவிதைகளைக் குப்பைத் தொட்டியில் போடக் கூடாது; அதே மாதிரி இலக்கண ரீதியாக எழுதப் பட்ட ஒரே காரணத்துக்காக மரபுக் கவிதைகளைக் கோபுரத்தில் வைக்க முடியாது. இதுதான் என் கட்சி. மரபுக் கவிதைகளிலும் சரி புதுக் கவிதைகளிலும் சரி, நிறைய பதர்கள் உண்டு என்பதை மறுக்க முடியாது.

※ க. ந. சுப்ரமணியன், நாகர்கோவில்

கே. பாலியெஸ்டர் வேஷ்டி, முழுக்கை சட்டை தரையில் உரசும் துண்டு இவைகளுடன் தரையில் கால் பாவாமல் ஐந்து வருடங்கள் நடக்க ஆசையுண்டா?

ப: கிடையாது. கிடையவே கிடையாது. இந்த உடையுடன் காரிலும் விமானத்திலும் போகத்தான் ஆசை உண்டு!

※ இரணியல்கலை, தூத்துக்குடி

கே. நில்லு முல்லு என்ற பெயர் எப்படி வந்தது? முழு அர்த்தம் என்ன?

ப: ஏடாகூடம், அசட்டுப் பிசட்டு, உப்பு சப்பு, கன்னு பின்னு, கெக்கேபிக்கே, லொட்டுலொசுக்கு மாதிரிவந்த வார்த்தை இது. இதன் முழு அர்த்தம் தெரியவேண்டுமானல் ரஜனிகாந்தை அணுகவும்.



※ த. ரவிக்குமார், கூவத்தூர்பேட்டை

கே. ஒசிப்புத்தகம் படிப்பதற்கும் சொந்தப் புத்தகம் படிப்பதற்கும் வேறுபாடு என்ன?

ப: என்னைக் கேட்டால் ஒசிப் புத்தகங்கள் தான் முழுமையாகப் படிக்கப் படுகின்றன. சொந்தமாகப் புத்தகம் வாங்கி விட்டால், 'நம் புத்தகம்தானே, எங்கே போகிறது' என்று படிப்பதைத் தள்ளிப் போடத் தோன்றுகிறது. ஓசிப் புத்தகம் விஷயம் அப்படி அல்ல. ஆகவே புத்தகங்களை ஓசியில் வாங்குவது சாலச்சிறந்தது.




※ நிலா. ஹாலித் நசீர், கோவை-23

கே. ஸ்ரீ வேணுகோபாலன், புஷ்பா தங்கதுரை ஒப்பிடுக?

ப: முன்னவர் கனராகம், பின்னவர் பாப் மியூஸிக். முன்னவர் ரவிவர்மா ஓவியம்; பின்னவர் சினிமா போஸ்டர். கதை, நடை, நெஞ்சில் நெகிழ்ச்சி ஏற்படும் சம்பவங்களை முன்னவர் தருவார், பின்னவரோ கிளுகிளுப்பு ஊட்டும் சம்பவங்களை சிறிய கதையுடன் கொஞ்சம் "கதை"யையும் சேர்த்துக் கொடுப்பார். ஆனால் வார்த்தைகள் அற்புதமாகப் பல இடங்களில் விழும். இரண்டுபேரும் நம்மைக் கவர்கிறார்கள்.

※ எஸ். எஸ். டி. ராஜன், திருவைதயூர்

கே. குடும்பப் பெண்களை ஏன் 'குத்துவிளக்கு' என்கிறார்கள்?

ப: நெல் குத்துவதாலும் வீட்டை விளக்கி வைப்பதாலும் சில சமயம் கணவன் மீது 'எரி'ந்து விழுவதாலும், மாமியாரைப் பற்றித் 'திரி'த்துக் கூறுவதாலும், எள் என்னுமுன் எண்ணெயாக இருப்பதாலும் இருக்கக் கூடும்!

பரிசு பெறுவர் :

இரணியல் கலை
டைப் III 9/6 தெர்மல் நகர்,
தூத்துக்குடி—6

## கடுகு பதில்கள்!



# பரிசு

மன்னார்குடி விசுவநாதன்

சுந்தரம் குழம்பினான்.

மேசை மேல் வைத்த காப்பி ஆறிக் கிடந்ததையும், சுவரில் தொங்கிக்கொண்டிருந்த பெல்ஜியம் கண்ணாடியையே வெறித்தவாறு தன் கணவன் பிரமை பிடித்த நிலையில் உட்கார்ந்திருந்ததையும் கவனித்த ஜானகிக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்தது.

''எந்தக் கோட்டையைப் பிடிக்க இப்படிக் குத்துக் கல்லாட்டம் உட்கார்ந்திருக்கீங்க?''

''ம்... என்ன ஜானகி... ஏன் சத்தம் போடுறே?'' என்று கேட்டுவிட்டுத் திருதிருவென விழித்தான்.

''ம்... இந்நேரம் சத்திய சோதனை படிச்சுக்கிட்டு இருப்பீங்களே... இன்னைக்கு என்ன ஆச்சு? இப்படி இடிச்ச புளியாட்டம் உட்கார்ந்திருக்கீங்க... காப்பி வச்சு அரை மணி நேரம் ஆச்சு... பார்க்கிறது பியூன் உத்தியோகம்... ஆனா பெரிய அரிச்சந்திரனா நடக்கணும்னு பார்க்கறீங்க. இதிலே ரெண்டு பொண்ணுங்க வேறே. ரெண்டும் வயசுக்கு வந்துட்டுதுங்க. கொஞ்சமாவது குடும்பத்தைப் பத்தி நினைச்சுப் பார்க்கப் போறீங்களா இல்லையா?''

ஜானகி அழ ஆரம்பித்துவிட்டாள்.

''ஜானகி... வீணா என் மனசைப் புண்படுத்தாதே. மனசாட்சிக்கு விரோதமா என்னால எதுவுமே செய்ய முடியாது.''

''சரி... மனச்சாட்சிப்படி நடந்தீங்களே, உங்களுக்கு மெடல் கிடைச்சுதா?''

''ஜானகி....''

''ஆமாம்... ரெண்டு வருஷத்துக்கு முன்னாடி உங்க பாங்குக்கு வந்த யாரோ ஒருத்தர் மூணு பவுன் சங்கிலியைப் போட்டுட்டுப் போயிட்டாங்க. அது உங்க கண்ணிலே பட்டது. உடனே மனச்சாட்சிக்கு விரோதமில்லாமே அந்தச் சங்கிலியைக் கொண்டு போயி பாங்க் ஏஜண்டு கிட்டே கொடுத்திட்டீங்க... ரொம்பச் சரி. இப்ப உங்க பாங்க் நிர்வாகிகள், கூட்டம் நடந்துச்சே... அதிலே உங்களை மாதிரி நேர்மையாக நடந்த ஊழியர்களுக்கெல்லாம் மெடலும் சர்ட்டிபிகேட்டும் கொடுத்தாங்க. உங்களுக்கு ஏன் ஒன்னும் கொடுக்கலை?''

''ஜானகி அதை நினைச்சுத்தான் நான் இப்படி இடிஞ்சு போயி உட்கார்ந்திருக்கேன். பாங்க் பெரிய அதிகாரி கிட்டே போய் விவரத்தைச் சொன்னேன். அந்த மாதிரி பவுன் சங்கிலி எதையும் உங்க பாங்க் ஏஜெண்ட் தலைமை ஆபீசிலே கொடுக்கலியேப்பான்னு சொல்லிட்டாரு...''

''அப்புறம்?''

''அப்புறம் என்ன... நான் எங்க பாங்க ஏஜெண்டு கிட்டப் போயி கேட்டேன். அதுக்கு அவரு என்ன பதில் சொன்னாரு தெரியுமா? விஷயத்தை யார் கிட்டேயும் சொல்லாதே.... உனக்கு ஆயிரம் ரூபாய் தர்றேன்னு சொல்றாரு....''

ஜானகி மௌனமாகி நின்றாள்.

''ம்... நீங்க என்ன பண்ணப் போறதா உத்தேசம்?''

''நான் என்ன ஜானகி செய்ய முடியும்? எனக்குத் தெரிஞ்சவழிநேர்மைஒன்னுதான். தலைமை பாங்க் அதிகாரிக்கு நடந்தது முழுவதையும் விவரமா எழுதிட்டேன்.''

''ஹும்... சரியாப் போச்சு. அதை வச்சு உங்க பாங்க் ஏஜண்டை அவங்கதான் என்ன பண்ண முடியும்னு நினைக்கிறீங்க? நீங்க நகையை அவர் கிட்டக் கொடுத்ததுக்கு என்ன ஆதாரம்? ஏதாச்சும் ரசீது... இல்லே... கடிதாசி ஏதாச்சும் எழுதி வாங்கி வச்சிருக்கீங்களா?''

''இல்லியே... ஜானகி... அப்புறம் என்ன செய்யலாம்னு சொல்றே?'' – பரிதாபமாகக் கேட்டான் சுந்தரம்.

''இந்த பாருங்க. நம்ம மூத்த பொண்ணு மாலாவுக்கு எப்படியாவது இந்தத் தையிலே கல்யாணத்தை முடிச்சுடணும். நம்ம பொன்னுச்சாமி நல்ல வரன் இருக்குன்னு வந்து சொல்றாரு. ஏழைக்கேத்த இடம். பையனுக்கு வாத்தியார் வேலையாம். மூணு பவுன் சங்கிலி போட்டுக் கல்யாணச் செலவுக்காகக் கையிலே ஆயிரம் ரூபாய் கொடுத்தாப் போதுமாம். இந்த மாதிரி சுளுவான இடம் நமக்குக் கிடைக்கவே கிடைக்காது. பேசாம அந்த ஆயிரம் ரூபாயைப் போய் வாங்கிட்டு வந்துடுங்க.''

ஜானகியை ஒரு மாதிரியாகப் பார்த்தான் சுந்தரம்.

''சும்மா பார்க்காதீங்க. ஒழுங்கா பிழைக்கிற வழியைப் பாருங்க.. எல்லாத்துக்கும் மனச் சாட்சி மனச் சாட்சின்னு சொல்லிக்கிட்டே இருந்தீங்கன்னு மடிஞ்சு போறதைத் தவிர வேறே வழியே இல்லே...ஆமாம்.''

ஜானகி போய்விட்டாள்.

ஏஜெண்ட் வீட்டினுள் நுழைந்த சுந்தரத்துக்கு உள்ளே நடந்த உரையாடலில் பவுன் சங்கிலி என்ற வார்த்தைப் பிரயோகப் படுத்தப்பட்டது அதிர்ச்சியைத் தரவே கதவருகில் நின்று ஜன்னல் வழியே எட்டிப் பார்த்தான்.

சோபாவில் ஆத்திரம் கொப்பளிக்க உட்கார்ந்திருந்தார் ஏஜெண்ட்.

எதிரில் பட்டுப் புடவை பளபளக்க நின்று கொண்டிருந்தாள் அவர் மனைவி.

அவளுக்குப் பக்கத்தில் தாய்க் கோழியின் சிறகில் பதுங்கிக் கிடக்கும் குஞ்சைப் போல் நின்று கொண்டிருந்தாள் அவர்களின் ஒரே மகள். வயது பத்து இருக்கும்.

''அப்பவே சொன்னேன். கோவிலுக்குப் போறப்பபவுன் சங்கிலியைப்போட்டுக்கிட்டுப் போக வேண்டாம்னு. கேட்டால்தானே... இப்ப மூணு பவுன் சங்கிலியைத் தொலைச்சுட்டு வந்து நிக்கறீங்களே... ஹும்... அந்தச் சங்கிலி யாருடையதோ.. பாவம், பியூன் சுந்தரம் கண்டெடுத்துக் கொண்டு வந்து கொடுத்தான். நான் அவனை ஏமாற்றி



ரெண்டு வருஷமா என் பெட்டியிலே வச்சிருந்தேன். இன்னைக்கு அதை எடுத்து உன் அருமைப் பொண்ணோட கழுத்திலே போட்டுக் கோவிலுக்கு அழைச்சுக்கிட்டுப் போனே. சரி, போனியே... ஒழுங்கா சாமியைக் கும்பிட்டுட்டுத் திரும்பி வர வேண்டியது தானே? அசதியா இருந்துச்சு கோவில் பிராகாரத்துக் கூடத்திலே படுத்துக்கிடந்தேன்னு சொல்றே!

எவன் கழட்டிக்கிட்டுப் போனுனே... இல்லே கழண்டு கீழே விழுந்து யார் கையிலாவது அகப்பட்டதோ... நான் என்னத்தைக் கண்டேன். போச்சு... கிட்டத்தட்ட நாலாயிரம் ரூபாய்...''

ஒரு வகையில் சுந்தரத்தின் நெஞ்சில் நிம்மதி பிறந்தது.

ஓசைப்படாமல் வந்த வழியே திரும்பினுன்.

அன்று இரவு நிம்மதியாய்த் தூங்கினுன்.

காலையில் மாலாவின் திருமணம் சம்பந்தமாகப் பேசப் பொன்னுசாமி வந்திருந்தார்.

''யப்பா சுந்தரம்... உன்னேட நேர்மை உன்னேடயே இருக்கட்டும். நான் சொல்றதைக் கேளு. உன் பொண்ணு மூக்கும் முழியுமா பார்க்க லட்சணமா இருக்கிறதி ஞலேதான் அந்த வாத்தியார் வீட்டிலே உன்கிட்டச் சம்பந்தம் பண்ணிக்க ஆசைப்படுறுங்க. மொதல்ல ஆயிரம் ரூபாய் பணம் இருந்தாக்கொடுப்பா. நான் அதைக்கொண்டு போய்க் கொடுத்துட்டுக் கல்யாணத்துக்குத் தேதி குறிச்சுட்டு வந்துடறேன். அப்புறம் எப்படியாவது கல்யாணத்துக்குள்ள மூணு பவுன் சங்கிலி செஞ்சு போட்டுடலாம்... சொல்றதைக் கேளுப்பா...''

''பொன்னுசாமி அண்ணே... ஒரு நல்ல இடத்திலே ஆயிரம் ரூபாய் கடன் கேட்டிருக்கேன். அநேகமாப் பணம் கெடைச்சுடும். இன்னிக்கே வேணும்னுலும் வாங்கிட்டு வந்து கொடுத்திடறேன். ஆனு சங்கிலிக்கு நான் எங்கே போவேன்?'' என்று சொல்லிவிட்டுக் கைகளைப் பிசைந்தான் சுந்தரம்.

''இதோ பாருங்க பொன்னுசாமி அண்ணே... என் தலையை அடகு வச்சாவது கல்யாணத்துக்கு முந்தி அந்த மூணு பவுன் சங்கிலியை நான் கொண்டு வந்து என் மகள் கழுத்திலே போட்டுடறேன்... நீங்க தயவு செய்து இந்தக் கல்யாணத்தைப் பேசி முடிச்சுடுங்க'' என்று துடித்தாள் ஜானகி.

கல்யாண நாள். புரோகிதர் திருமந்திரம் ஓதிக் கொண்டிருந்தார்.

ஓமகுண்டத்தில் புகை கிளம்பி மாப்பிள்ளையின் கண்களில் கண்ணீரை வரவழைத்தது.

மாப்பிள்ளையின் அப்பா சங்கரலிங்கம் ருத்ர தாண்டவம் ஆடிக் கொண்டிருந்தார்.

ஜானகி தூண் மறைவில் நின்று நெஞ்சைப் பிசைந்து கொண்டிருந்தாள்.

சுந்தரம் ஒரு மூலையில் உட்கார்ந்து ஏன் தான் பெண்ணைப் பெற்றேமோ என்பதை நினைத்து மனம் புழுங்கிக் கொண்டிருந்தான்.

---




● வாழ்க்கைத் தொகுதியில்
நடக்கும்
வாக்குப் பதிவில்
வாய்மையே ஜாமீன் இழக்கிறது
ஒன்றைப் பத்தாக்கும்
உற்பத்தித் திறன்
சத்தியத்திடம்
சத்தியமாய் இல்லை.

● வாழ்க்கைக் கிரிக்கெட்டில்
பொய்மை குவிக்கும்
ஓட்டங்களைக்
கணக்கிட்டால்
கவாஸ்கரைப் பற்றிய — நமது
கர்வம்
கரைந்து போய்விடும்.
ஒவ்வொரு முறையும்
ரணம்பட்ட உடம்போடு
வாய்மையே
'ரன்அவுட்.' ஆகிறது.

● சமத்துவம்
சுதந்திரம்
சகோதரத்துவம் — என்று
மூன்று கோல்களை
ஊன்றிச்
சத்திய மட்டையைக்
கரத்தில் தூக்குவோம்
இனி
ஆட்டம் இழப்பது
பொய்ம்மையே ஆகட்டும்.

● வாய்மை,
மனிதனின்
இறுதிநாள் மரியாதைக்கு
ஆள் இரட்டினுல்
போதாது!
வாழும்போது
உலையில் அரிசிபோட — அது
உத்தரவாதம்
தரவேண்டும்.

● உண்மைக்காக நாம்
உயிர்விட வேண்டாம்...
வாழ்வில்
உபயோகப்படுத்துவோம்.
ஏனெனில்
உண்மைக்காக உயிர்விட்டவர்
கதைகளைச்
சொல்லிச் சொல்லி....
பலர்
உயிர்வாழ்வதற்காகப்
பொய்யின் பின்னுல்
ஓடிப்போனுர்கள்.
இதுவரை
பொய்யின் பிரசுரங்களாக
இருந்துவிட்டோம்....
இனி,
சத்தியம் நம்மை
அச்சுக் கோக்கட்டும்.

-தமிழன்பன்



திரு சி. ஆர். எம். சுவாமி, (Media Director, Contour Advertising Private Limited, Bombay) அவர்களின் குமாரத்தி சௌபாக்கியவதி மைதிலிக்கும், திரு டி. எஸ். ஸ்ரீனிவாசன் (Air India, Bombay) அவர்களின் குமாரன் சிரஞ்சீவி ரவிசங்கருக்கும் பம்பாயில் சமீபத்தில் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது. வாழ்க மணமக்கள்.



மஹாகவி சுப்ரமண்ய பாரதியார் கொள்ளுப் பேரனும், திருமதி லலிதாபாரதி—வெங்கடசுப்ரமண்யத்தின் புதல்வனுமாகிய சிரஞ்சீவி V. அர்ஜுன் M.Sc.,க்கும், Shining Stars Society திரு நாராயண அய்யரின் பேத்தியும், திருமதி ஸரஸ்வதி—சக்கரவர்த்தியின் புதல்வியுமாகிய சௌபாக்யவதி விலாசினி B.A.,க்கும் சென்னை தி. நகரிலுள்ள பாலாஜி கல்யாண மண்டபத்தில் திருமணம் கடந்த மே மாதம் 15-ந் தேதி விமரிசையாய் நடைபெற்றது.

கத்தி, துப்பாக்கி, அருவாள் போன்ற கருவிகளைக் கொண்டு பயமுறுத்துவதைக் கேட்டிருக்கிறோம். ஆனால் லக்னோவில், உத்திரப் பிரதேச போக்குவரத்தில் பணிபுரியும் தேசிராம் என்ற டிரைவர் ஒருவர் கட்டுவிரியன் பாம்பைத் தம் சட்டைக்குள் எப்போதும் வைத்துக்கொண்டு பயமுறுத்துவாராம். பலமுறை ஜெயிலுக்குப் போய் வந்த இவரை அரசாங்கம் வேலையிலிருந்து நீக்கம் செய்து விட்டது. எப்படியோ அங்குள்ள கோயில் ஒன்றில் வேலைக்கு அமர்த்தப்பட்டார். இதைக் கண்ட தலைமை அதிகாரி ஒருவர் அவருடன் சண்டை போட்டு வெளியேறும்படி கூறினார். வந்ததே கோபம் தேசிராமிற்கு. சட்டைக்குள் வைத்திருந்த 5 அடி கட்டு விரியனை எடுத்து விட்டார். பலன் அதிகாரி மருத்துவமனைக்கு எடுத்துச் செல்லப்பட்டார். தேசிராம் மறுபடியும் ஜெயிலுக்குப் போனார்!

இந்தியா டுடே

— கலாமூர்த்தி



---

சுந்தரத்தின் தோள்களில் கை வைத்து அழுத்தினார் பெரியவர் ஒருவர்.

''வணக்கமுங்க...''

''எனக்கு வணக்கம் சொல்றது இருக்கட்டும். கல்யாணத்திலே என்ன குழப்பம்?'' என்று கேட்டார் அவர்.

அவர் பெயர் நல்லசிவம்.

கொஞ்சம் வசதியானவர். நல்ல குணம் படைத்தவர். வியாபாரம் செய்கிறார். அவரிடம்தான் சுந்தரம் ஆயிரம் ரூபாய் கடன் வாங்கியிருந்தான்.

இதற்குள் பொன்னுசாமி ஓடிவந்து விவரம் முழுவதையும் நல்லசிவத்திடம் சொல்லி முடித்தார்.

ஜானகியும் ஓடிவந்தாள்.

''காலமெல்லாம் நேர்மை நேர்மைன்னு பினாத்தறீங்களே... அன்னைக்கே நான் சொன்னேன். யாரோ பாங்கிலே தொலைச்சுட்டுப் போன மூணு பவுன் சங்கிலியை எடுத்து நல்ல பேரு கெடைக்கும்னு பாங்க் ஏஜண்டுக்கிட்டே கொண்டு போய்க் கொடுத்தீங்க. அதை அவர் அபேஸ் பண்ணிட்டாரு...''

சுந்தரம் இடைமறித்தான். ''ஜானகி! அவசரப்படாதே... அந்தச் சங்கிலியை அவரும் அனுபவிக்கவில்லை. அவர் மகள் கழுத்திலே போட்டுக்கிட்டுப் போன வாரம் வெள்ளிக் கிழமை கோயிலுக்குப் போயிருக்கா... அதை எவனோ அபேஸ் பண்ணிக்கிட்டுப் போயிட்டான்...''

''எந்தக் கோயில்லே?'' என்று இடைமறித்துக் கேட்டார் நல்லசிவம்.

''அங்காள பரமேஸ்வரி கோயில்லதான்... நம்ம கிழத் தெருவிலே இருக்குல்ல...''

''ஓ...'' என்ற நல்லசிவம், தமது மகளின் கழுத்தில் கிடந்த சங்கிலியை எடுத்துக் காட்டி, ''இதுதானா பாருங்க'' என்றார்.

''ஆமாம்...இதே சங்கிலிதான்... இந்தச் சங்கிலி உங்களுக்கு எப்படிக் கிடைச்சது?'' என்று குழப்பத்துடன் கேட்டான் சுந்தரம்.

''அதே கோயிலுக்கு என் மனைவியும் மகளும் போயிருந்தாங்க. பிராகாரக் கூடத்திலே கொஞ்ச நேரம் படுத்துத் தூங்கியிருக்காங்க. எழுந்து பார்த்தா இந்தச் சங்கிலி கிழே கிடந்திருக்கு....''

''அப்படியா?''

''அதுமட்டுமில்லே சுந்தரம்...தெய்வத்தின் செயலை என்னன்னுதான் சொல்றது? ரெண்டு வருஷத்துக்கு முன்னாடி வியாபாரத்திலே ஏற்பட்ட ஒரு நெருக்கடிக்காகக் கொஞ்சம் நகைகளை நீ வேலை பார்க்கிற பாங்கிலே அடமானம் வைக்கறதுக்காக எடுத்து வந்தேன். எப்படித்தான் தவறிப் போச்சோ தெரியலே...இந்த மூணுபவுன் சங்கிலி தவறிட்டுது. அது பாங்க் கட்டிடத்துக்குள்ளேதான் விழுந்திருச்சுன்னு எனக்கு இப்பத்தான் தெரியுது. தேடிப் பார்த்துட்டுப் பேசாம இருந்துட்டேன். இப்ப அது தானாகவே கெடைச்சுடுத்து. அதிலே என் மகள் பேரு கூட இருக்கே பாரு... மாலான்னு இருக்கும்.''

அப்பொழுதுதான் சுந்தரம் அதைக் கவனித்தான். ஆங்கிலத்தில் மாலா என்ற எழுத்துப் பொறிக்கப்பட்டிருந்தது.

''சரி. என் பொண்ணுக்கு வேறே சங்கிலி இருக்கு. உன் பொண்ணோட பேரும் மாலா தானே... சரி மிஸ்டர் பொன்னுசாமி... கல்யாணம் நடக்கட்டும்'' என்றவாறே அந்த மூணு பவுன் சங்கிலியைப் பொன்னுசாமியின் கையில் கொடுத்தார் நல்லசிவம்.

''வேணாமுங்க... அது முறையில்லீங்க...'' என்று சொன்னான் சுந்தரம்.

''சுந்தரம்...மாலா உன் பொண்ணு மட்டுமில்லே... என் பொண்ணும் கூட! மேலும் திருமணப் பரிசாக நான் கொடுக்கிறதை மறுக்க உனக்கு உரிமை கிடையாது'' என்று கண்டிப்புடன் சொன்னார் நல்லசிவம்.

கெட்டி மேளம் முழங்கியது.

சுந்தரத்தின் மகள் மாலாவின் கழுத்தில் மாப்பிள்ளை தாலியைக் கட்டினான்.

சுந்தரம் மானசீகமாக அங்காள பரமேஸ்வரிக்கு நன்றி செலுத்திக் கொண்டிருந்தான்!

# நீயா?

1

நகரின் மையமான பகுதியில், உயரமான கட்டிடத்தில் மூன்றாவது மாடியில் –

நீலாவுக்குப் போரடித்தது. 'மகேஷ் அண்ட் நடேஷ் பிரைவேட் டிடெக்டிவ்ஸ்' என்கிற அந்தக் கம்பெனி கசந்தது.

கையிலிருந்த நாவலை மடித்து, டிராயருக்குள் போட்டாள். விரலை வாயருகில் சொடுக்கிக் கொட்டாவி விட்டாள். கைகளை அழகாக மேலே உயர்த்தி யாரோ ஒரு ஓவியனுக்கு செக்ஸி போஸ் கொடுப்பது போல் சோம்பல் நெரித்தாள். சாணுக்கும் குறைவான ஜாக்கெட்டில் சிறைப்பட்டிருந்த சின்னப் பந்துகள் சிரமப்பட்டன.

ஹாலைச் சுற்றிக் கண்களை ஓட்டினாள். வெறித்துக் கிடந்தது. ஜன்னல்களில் பச்சை நிறக் கர்டன்கள் செல்லமாக அசைந்தன. மகேஷ் – நடேஷ் இரண்டு ஆசாமிகளுக்கும் பச்சையில் அசாத்திய மோகம். ஸோபா, டேபிள் கிளாத், டெலிபோன், பென்சில், பேப்பர் வெய்ட் எல்லாமே பச்சை மயம்.

ஒரு ஓரமாக பீரோக்கள் ஏராளமான 'பைல்'களை ஏந்தி நின்றன. 'ஸ்காட்லாந்து யார்ட்' கொடுத்த நற்சாட்சிப் பத்திரம் ஒன்று மேலண்டைச்சுவரில் தங்க பிரேமில் மின்னியது.

வாசலுக்கு நேர் எதிர் சுவரில் ஒரு ராட்சத நண்டு – கைகளைப் பரப்பிக் கொண்டு, பொன் வண்ணத்தில் மின்னிற்று. மகேஷ்-நடேஷ் கம்பெனியின் சின்னம்!

அதனடியில் ஒரு ஸோபா-கம்-பெட்டும் இரண்டு சிறு நாற்காலிகளும் கிடந்தன. ஸோபாவில் டிப்-டாப்பாக உடுத்திய ஒரு பேர்வழி, புதுக் கருக்கு அழியாமல், ஆனந்தமாகச் சயனித்து, ஒரு புத்தகத்தை வேகமாகப் படித்துக் கொண்டிருந்தான்.

அந்தச் சோபாவின் ஒரு கைமீது கிடந்த அவனுடைய இரண்டு பூட்ஸ் கால்களும் குறுக்காக ஆரோகணித்து, தலையாட்டிப் பொம்மை போல ஆடிக் கொண்டிருந்தன.

நீலா மாதிரியே சிவப்பாக இருந்தான். துப்புக்களைக் கொத்தத் துடிக்கும் நீண்ட மூக்கு. வெரி ஸ்மார்ட் ஃபெல்லோவாக இருந்தான்.

நீலா அவனை விசேஷமாகப் பார்த்துப் பெருமூச்செறிந்தாள். டைப்ரைட்டர் மீது சாய்ந்து கொண்டு ஏதோ ஒரு சினிமாவின் சோகக் கட்டத்துக் கதாநாயகி மாதிரி பெருமூச்செறிந்தாள்.

இந்த ஆபீஸில் சேர்ந்த புதிதில் தான் அவனை உயிரை விட்டுக் கொண்டு காதலித்து, ஏங்கியது எல்லாவற்றையும் நினைந்துக்கொண்டாள். அவனுக்காகவே அம்மாவை ஸ்பெஷல் டிபன் கட்டிக் கொடுக்கச் சொல்லிக் கொண்டுவந்து, ஒரே மேஜையில் அவனுடன் பகிர்ந்துகொண்ட இனிய நாட்கள் அவை.

அந்த நாட்களில்–

அவளுடைய கண்கள், உதடுகள், மார்பகங்கள் எல்லாமே அவன்மீது ஒவ்வொரு நிமிஷமும் காதலை வாரி வீசின. வாய் ஒன்று தான் அதைச் சொல்லத் துணிவின்றி அடங்கிக் கிடந்தது.

ஒரு நாள் உணவுவேளையில் அவன் படு குஷியாக இருந்தான். தயிர் வடை கொண்டு வந்திருந்தாள். "நீலா! டெல் மீ. நீ யாரைக் கல்யாணம் செய்து கொள்ளப் போறே" — கேட்டான்.

புல்லரித்தாள். 'நீங்க யாரைப் பண்ணிக்கச் சொல்றீங்களோ, அவங்களைப் பண்ணிக்கறேன்' என்றாள்.

'என்னைப் பண்ணிக்கொள்' என்பானு என்று எதிர்பார்த்தாள். ஏமாற்றம்; பெரிய கோழி முட்டை ஏமாற்றம். "நீ நம்ப நடேஷைப் பண்ணிக் கொண்டு விடேன், நீலா –' என்றான். அதிர்ந்து, இடிந்தாள். கிரேட்டஸ்ட் ஷாக் ஆன் தி எர்த்! சந்தேகமே இல்லை. முழுசாக இரண்டு நிமிஷமாயிற்று சுதாரிக்க.

"நீங்க யாரைப் பண்ணிக்கப் போறீங்க–பாஸ்?" என்றாள்.

"நானா?" அலட்சியமாகக் கேட்டான். "எனக்குத்தான் ஒரு ஒல்ட் டெவில் காத்துக் கொண்டிருக்கிறதே–" சிரித்தான். "என்னோட காலேஜ்ல படிச்சா – மஞ்சுன்னு பேரு –மாலையை வைச்சுக்கிட்டு இரண்டு வருஷமாக 'தபஸ்' பண்ணிக்கிட்டிருக்கா – கைகூட வலிச்சிருக்கும்!" மறுபடியும் சிரித்தான்.

நீலா அன்றிலிருந்து இண்டர்வெல்லுக்குப் பிறகு வருகிற கதாநாயகி ஆனாள். இமர்

திடீரென்று பெருமூச்சு விடுவாள். 'குபுக்'கென்று கண்களில் அழுகையை வரவழைத்துக்கொண்டு அதில் ஆனந்தம் காண்பாள்.

அதன் பின் அவர்கள் அந்த விஷயம் பற்றிப் பேசவே இல்லே.

''என்ன டிபன்?''

''சர்க்கரைப் பொங்கல் — கீரை வடை.''

''ஹைய்ய — பாதியைத் தள்ளு இந்தப் பக்கம்.''

''நேத்து ரீகல்லே சோமனதுடி பார்த்தேன். பஸ்ட் கிளாஸ் பிக்சர். நீ இன்னிக்கே பாரு....

''உடம்பு என்னவோ மாதிரி இருக்கியே. லீவு வேணா எடுத்துக்கிட்டு அம்மாவையும் அழைச்சுக்கிட்டு ஏதாவது ஹில்ஸ்டேஷன் போய் இருந்துட்டு வாயேன் — ஆபீஸ் செலவிலே.''

''வேண்டாம், பாஸ்—''

—இதோடு சரி. ஒரு நாள் கூட உடம்பைத் தாண்டி அவன் மனசை அறிய அவன் முயன்றது கிடையாது.

நீலா எழுந்து நின்றாள். சோபாவில் பூட்ஸ் கால்கள் ஜோராகத் தலையாட்டிக் கொண்டிருந்தன. எவ்வளவு அழகான, உரோமம் அடர்ந்த, ஹெர்குலிஸ் கைகள், விரல்கள், அந்தக் கைகளைப் பிடித்து, நெஞ்சோடு, மார்பின் மீது வைத்து அழுத்திக்கொள்ள வேண்டும் என்று, அந்த ஆபீசுக்கு வந்த நாள் முதலாகவே ஆசைப்பட்டாள். ஆனால் அது நிறைவேறவே இல்லே. வெறும் கனவாகவே போய்விட்டது. எத்தனையோ நிறைவேறாத கனவுகள். அதில் இதுவும் ஒன்று.

நீலா நிமிஷ நேரம் ஒரு குளோஸப்புக்காக நின்று சினிமாப் பெருமூச்சு விட்டாள்.

ட்ரிங்.... ட்ரிங்.... ட்ரிங்....

ஹாலின் மேல் கோடியில் பாஸின் கண்ணாடி 'காபின்' உள்ளிருந்து டெலிபோன் கூப்பிட்டது. கதவு திறந்திருந்தது.

கனவுகளை உதறிவிட்டு நிஜத்துக்கு வந்து நகர்ந்தாள்.

''நீலா—'' மகேஷின் குரல் தடுத்து நிறுத்தியது.

''எஸ் பாஸ்'' — நின்று திரும்பிப் பார்த்தாள்.

அவன் எழுந்து உட்கார்ந்து கொண்டு ''அந்தத் தடியனாகத்தான் இருப்பான் — தட் ஓல்ட் டெவில்—இந்தக் கட்டிடத்து ராஸ்கல்''

''கவலைப்படாதீங்க. அவனா இருக்காது. 'இன்னும் ஒரு வாரத்துக்கு வாடகை பாக்கின்னு கேட்டுக்கிட்டு வந்து நிக்காதீங்க. பெரிய பாஸ் ஊர்லேர்ந்து வந்தப்புறம் தான் கிடைக்கும்'னு நேத்தே சொல்லிட்டேன்.''

''நேத்தும் டெலிபோன் பண்ணினா?''

''இல்லே. நேர்லேயே வந்திருந்தாரு.''

''எப்ப?''

''நீங்க வெளியே போயிருந்தப்ப.''

''படவா, ராஸ்கல்! நான்தான் ஆபீஸ்லே எல்லாம் வந்து நிக்கக் கூடாதுன்னு சொல்லியிருக்கேனே — என்ன பிரமாத பாக்கின்னு வந்து நின்னானும். த்ரீ மன்த்ஸ் — ஒன்லி த்ரீ



மன்த்ஸ் — அவ்வளவுதானே? ஒரு பக்கா கேஸ் வந்துட்டா என்னூற்றிச் சொச்சத்தைத் தலையைச் சுற்றி வீசி எறிந்துட மாட்டோமா—''

இதற்குப் பதில் சொல்ல ஒன்றுமில்லாததால், கைகளை முன்னால் கோத்துக்கொண்டு ஒரு மரியாதைப் புன்னகையைச் சிந்திவிட்டு லேசாகப் பெருமூச்சு விட்டாள் நீலா. அடிக்கடி பெருமூச்சு விடவேண்டும் — கதாநாயகிகள் எல்லாம் அப்படித்தான் விடுவாங்க.

''ஆல் ரைட். கோ அஹெட் ஸீ.''

நீலா கதாநாயகி மாதிரியே மெதுவாகப் போய், பூவை எடுக்கிற மாதிரி ரிஸீவரை எடுத்து 'ஹலோ' சொன்னாள். சினிமா கதாநாயகி மாதிரியே மார்பை விம்ம விட்டுக் கொண்டு மேலே விட்டத்தைப் பார்த்தாள்.

ஆனால் அடுத்த கணம் அவள் நடிப்புக் கலைந்தது. ''ஒன் மினிட் ப்ளீஸ்—'' என்று அவசரமாகச் சொல்லிவிட்டு, ரிஸீவரின் வாயைக் கையால் மூடிக் கொண்டு எதிரே பார்த்து, ''பாஸ்! யுவர் ஸ்வீட் ஹார்ட் ஸ்பீக்கிங் — ப்ரம் நர்ஸிங் ஹோம்'' என்றாள்.

''ஐ ஸீ—'' என்று எழுந்தோடி வந்தான் மகேஷ். ரிஸீவரை வாங்கியபோது நீலாவின் உடம்பு பக்கத்தில் மணமாய் மணத்தது. எப்போது அவள் அருகில் வந்தாலும் 'ஹம்' என்று அந்த மணத்தை அவன் இழுப்பது வழக்கம். இப்போதும் 'ஹம்' என்று ஒரு இழுப்பு இழுத்துக் கொண்டே (பாவி என்னமாய் மணக்கிறாள்) ''ஹலோ டார்லிங்!'' என்றான். நாற்காலியில் சாய்ந்து கால்களைத் தூக்கி மேஜை மீது போட்டுக் கொண்டான்.

''ஹனி! எவ்வளவு நேரமாய் நான் கூப்பிட்டுக் கொண்டிருக்கிறேன்'' என்று ரிஸீவரில் ஒரு தேன் குரல் சிணுங்கியது.

''ரொம்ப நேரமாகவா? ட்ரூலி....?'' அவ்வளவு தூரத்திலிருந்து பேசுகிறாயே... உன் குரல் எத்தனை கட்டடங்கள், ஹோட்டல்கள், ரோஷனிங்குகளைத் தாண்டி வரவேண்டும்... டயமாகாதா?''

ரிஸீவரின் எதிர்ப்புறம் ஒரு 'களுக்'கும் அறைக்குள் இன்னொரு 'களுக்'கும் கேட்டன. இரண்டாவது களுக்கின் அம்மா, நீலா. எதிரே கட்டாய் வாயிலில் நின்றாள். நிமிர்ந்து பார்த்தான். 'நீ போகலாம்' என்று அதற்கு அர்த்தம்.

அவள் அழகாகத் திரும்பி, நடந்து, கதவை மெதுவாகச் சாத்திக் கொண்டு போனாள். அந்த அழகை இம்மி விடாமல் ரசித்துக் கொண்டே போனில் சொன்னான்: ''சொல்லு மஞ்சு! எப்படி இருக்கிறாய்? ஆல்ரைட்?... பயல் என்ன பண்ணிக் கொண்டிருக்கிறான்— ரொம்பப் படுத்துகிறானா, உன்னை?''

'களுக்'கென்று மீண்டும் சிரித்தாள் மஞ்சு. ''அப்பா படுத்துவதை விடவா?'' என்று கேட்டாள்.

''நான் உன்னை ரொம்பப்படுத்துகிறேனா?''

''இல்லை. பூவாகத்தான் தாங்குகிறீர்கள்! தோப்புக்கரணம் போடுகிறீர்கள்.''

''அறுவை அடிக்காதே!''

''நீங்கள் படுத்தாமலா இந்தப் பயல் வந்தான்?''

''ஓ. அதைச்சொல்றியா?'' மகேஷ் சிரித்தான்.

''அவனைஎன்னிடம் தள்ளுவதற்கு என்ன பாடு படுத்தினீர்கள்! குரங்கு கை பூமாலையாக நான் தவித்தது எனக்கல்லவா தெரியும்?''

''என்னைக் குரங்கு என்கிறாயா — யூ ராஸ்கல்!''

''நான் சொல்வேனா... கிளி மாதிரி ஒரு பிள்ளையைக் கொடுத்திருக்கிறீர்களே-குரங்கு கிளியைத் தருமா எங்கேயாவது?''

''நீயே ஒரு கிளி தானே! கிளிக்குக் கிளி பிறந்திருக்கிறது. தட்ஸ் ஆல்.'' சிரித்தான் மகேஷ். அவன் கண்கள் 'இங்கேயும் ஒரு கிளி இருந்ததே. அது எங்கே?' என்று தேடின. அந்தக் கிளி—

அப்போது விசிட்டர்கள் ஹாலில், முன்பு அவன் படுத்திருந்த அதே சோபாவில் எதிரில் சோக பாவத்துடன் நின்றிருந்தது. மங்கிய ஒளி வீழும் அவள் பெருமூச்சு விடும் போது சின்ன மார்பகங்கள் ஏறி இறங்குவது தெரிந்தது.

''க்கும்—'' போனில் மஞ்சு நிஷ்டூரமாய் முனகினாள்.

''ஆல் ரைட். கம் டு தி பாய்ண்ட்.'' போனுக்குத் திரும்பினான்.

''ஹனி—'' மஞ்சு குழைந்தாள். ''நான் ஒரு யோசனை சொல்லட்டுமா— கேட்கிறீங்களா?''

''சொல்லு டார்லிங்!'' — அவன் கண்கள் நீலா மீது ஊர்ந்தது. ஓ, எவ்வளவு அழகாக இருக்கிறாள் இவள்;

''ஒரு மாசம் ஆபீசுக்கு லீவு போடுங்களேன். பையனை எடுத்துக் கொண்டு, எங்கே யாவது கொலை, கொள்ளை, கிட்நாப்பிங் எந்தச்சனியனுமே இல்லாத இடமாகப் பார்த்துப் போய் 'ஹாய்யாக' இருந்துட்டு வருவோமே — என்ன சொல்றீங்க?''

''என்ன இது மஞ்சு — திடீர்னு.''

''ஆமாங்க. இன்னிக்கு விடிகாலையிலே ஒரு சொப்பனம் வந்ததுங்க. — ரொம்பப் பயமுறுத்திடுச்சுங்க.''

''என்ன சொப்பனம்?''

''கறுப்பா, குள்ளமா, பெரிய மீசையுடன் ஒரு ஆள் லுங்கி கட்டிக் கொண்டு உங்களைத் தேடி வர்றான். ஒரு கத்தை நோட்டுக்களை எடுத்துப் போட்டு உங்களை அவனோட வரச் சொல்றான்.''



''இப்ப ஒரு ஐநூறு கிடைச்சாப் போதும், டார்லிங்... எவ்வளவு மோசக்காரப் பயலாக இருந்தாலும் அவனுடன் நான் உலகத்தின் எந்த மூலைக்கும் போகத் தயார். ...அவ்வளவு நெருக்கடி மேடம்'' — சிரித்தான்.

''தமாஷ் இல்லே ஹனி... அப்புறம்தான் வரது பயங்கரம், ஹனி....''

''சொல்லு.''

''அவனோட நீங்க போறீங்க... கார்லே... வழியிலே—''

''கார் பஞ்சராகி விட்டதா? மெக்கானிக்கைக் கூப்பிடணுமா? இல்லே, என்னே கீழே இறங்கித் தள்ளச் சொல்றீங்களா?''

''விளையாடாதீங்க. நான் ரொம்ப சீரியஸான சமாசாரம் சொல்லிக் கொண்டிருக்கிறேன். வழியில் ஓரிடத்தில் ஒரே இருட்டாக இருக்கிறது. திடீரென்று நாலைந்து முரட்டு ஆளுங்க வந்து உங்களைக் கட்டித் தூக்கிக் கொண்டு போய் ஒரு பெரிய மரத்தோடு சேர்த்து வைச்சுக் கட்டறாங்க. அந்த மீசைக்காரன் கள்ளிகளைக் கொண்டு வந்து உங்களைச் சுத்திப் போட்டு ஒரு தீப்பந்தத்தாலே....ஓ, மை காட்... ஹௌ கான் ஐ டெல் இட்...'' குரலில் நடுங்கினாள்.

''வெரி இன்டரஸ்டிங் ஸ்டோரி, மஞ்சு... எந்த நர்ஸ் படித்துக் காட்டினாள் இதை—''

''ஸ்டோரியா?'' — அதிர்ந்தாள். ''அந்த ஆளு கையிலே ஒரு பெரிய தங்க மோதிரம் கூடப் போட்டுக்கிட்டிருந்தாங்க. அதிலே 'கே'ங்கற எழுத்துக்கூட இருந்துச்சே...''

''இலைட் வரைக்கும் வேண்டுமானாலும் போட்டுக் கொள்ளட்டும்.... நீ அதைக் கவனித்திருக்கக் கூடாது. யூ ஆர் எ கிரேட் டிடெக்டிவ்ஸ் ஒய்ப்... நீ அவன் கார் நம்பரைக் கவனித்திருக்க வேண்டும். அது தான் இந்தக் கேஸில் உபயோகப்படக்கூடிய ஒரு துப்பு... டூ லேட் இட்—''

''ஐய்யய்ய—'' போனிலேயே அழகு காட்டினாள், மஞ்சு. ''நான் 'மிஸ்' பண்ணினது இருக்கட்டும். நீங்கள் என் அம்மா ஊரிலிருந்து வருகிற டிரெயினை மிஸ் பண்ணி விடாதீர்கள்! பாவம், பேரனைப் பார்க்க ஆசையாக வருகிறாள். ஸ்டேஷனில் திண்டாட விட்டு விடாதீர்கள். உங்களுக்குப் பிடித்த குஞ்சாலாடு பண்ணிக் கொண்டு வரும்படி எழுதி இருக்கிறேனுக்கும்... எத்தனை மணிக்கு டிரெயின் என்பதாவது ஞாபகமிருக்கிறதா?''

''எப்போது என்று சொன்னாய்? இரண்டு முப்பதுக்கா... இரண்டு நாற்பதுக்கா?''

''இரண்டு நாற்பதுக்குப் போனால் பிளாட்பாரத்தைச் சுத்தமாக அலம்பி விட்டிருப்பாங்க. எனக்குத் தெரியும். எங்க அம்மா வருகிற வண்டி என்றால் உங்களுக்கு ஞாபகமே இருக்காது... இரண்டு பத்துக்கு... மறக்காமல் போங்கள்.''

''மறக்காமல் போகிறேன்.''

''அப்புறம், ஒரு மஸ்கிட்டோ அம்பர்லா சொன்னேன்... சின்னதாக... ரோஸ் கலரில்!''

''லாலா கடை பகோடா பொட்டலம் கூடத்தான் சொன்னாய்... முந்திரி நிறையப் போட்டது....''

''அது நன்றாக ஞாபகம் இருக்கும். தின்கிற சமாசாரம் ஆச்சே!'' சிரித்தாள்.

''நீ ரொம்ப அழகாய்ச் சிரிக்கிறே மஞ்சு.''

''போதும் தாஜா... சித்தே இருங்கள். குழந்தை முழித்துக் கொண்டு விட்டான். போர்த்திவிட்டு வருகிறேன்.''

''மெதுவா வா. கால் மீ எகெய்ன். நான் வெய்ட் பண்றேன்.''

ரிஸீவரை வைத்துவிட்டுச் சௌகரியமாக நாற்காலியில் சாய்ந்து கொண்டான். ஒரு கண்ட்ரோல் அறையிலிருந்து தெரிகிற தொழிற் கூடம் மாதிரி ஹால் தெரிந்தது. ஒரு பாஷ் ஹோட்டலில் லவுஞ்ச் மாதிரி அரை இருட்டில் கிடந்தது. சன்னமான ஒளியின் நடுவே ஒரு கனவுக் கன்னி மாதிரி நின்றாள் நீலா.

''ஓ! வாட், எ லவ்லி ஃபிகர்!'' திடீரென்று நினைத்தான். அவளுக்கு ஒரு இன்கிரிமெண்ட் கொடுக்க வேண்டும். ரொம்ப நாளாக அவளைக் கவனிக்கவே இல்லை.

தன் காதலன் இன்னமும் அந்த சோபாவிலேயே படுத்துக்கொண்டிருப்பதாக நினைத்து அங்கேயே நின்றிருந்தாள் நீலா. அவன் என்னமோ 'ஜோக்' அடிக்கிறான். அவள் அதை ரசித்து 'களுக்'கென்று சிரிக்கிறபோது, சட்டென்று யாரோ கூப்பிட்டது மாதிரி இருந்தது. திரும்பினாள்.

''டொக், டொக்'' என்று வெளிப்புறக் கதவில் விரல்கள் சப்தித்தன.

வேகமாக நகர்ந்து ''எஸ்'' என்று கதவைத் திறந்தான்.

அங்கே—

கறுப்பாய், குள்ளமாய், மீசை வைத்துக் கொண்டு, இடுப்பில் லுங்கி கட்டிக்கொண்டு ஒரு ஆள் நின்று கொண்டிருந்தார்.

(தொடரும்)

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

**"நீ அடிக்கடி சினிமா போவதை உன் மனைவி கண்டிப்பதில்லையா?"**

**"கண்டிக்கிறாளே! . . இப்படி நீங்களும் சினிமாவுக்குப் போய் ஏன் பணத்தைப் பாழடிக்கிறீர்கள்? நான் ஒருத்தி போவது போதாதா? என்று கேட்கிறாளே!"** —ராமுசாமி



# மொளகாய்ச் சாத்து

## ராஜேஷ்குமார்

அறைக்கு வெளியே இருந்த சிமெண்ட் திட்டில் உட்கார்ந்து, சிகரெட் புகைத்தபடி இருட்டின் வாயில் விழ ஆரம்பித்துவிட்ட அந்தச் சோலையூர் கிராமத்தை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தேன்.

கிராமத்து ஜனங்கள் இரவு நேர உணவை முடித்துக்கொண்டு சாரி சாரியாகக் கிழக்குப் பக்கமாய்ப் போய்க் கொண்டிருந்தார்கள்.

நான் அந்தக் கிராமத்து பஞ்சாயத்து யூனியன் ஆரம்பப் பள்ளியில் ஓர் ஆசிரியராகப் பணியேற்று இன்றைக்குச் சரியாய்ப் பத்து நாள்தான் ஆகியிருந்தது. எங்கே போகிறார்கள் இவர்கள்?

முண்டாசைக் கட்டிக் கொண்டு கெச்சலாகப் போய்க் கொண்டிருந்த ஒருத்தனை நிறுத்தினேன். ''என்ன விஷயம்? எல்லாரும் எங்கே போறீங்க?''

''அதுங்களா...? பண்ணையார் வூட்ல பத்து நாளைக்கு முன்னாடி ஏழு பவுனு நெக்லேஸ் திருட்டுப் போயிடுச்சாம். அத எடுத்தவன் யார்னு கண்டு பிடிக்கிறதுக்கோசரம் பஞ்சாயத்துக்கூட்டியிருக்காங்க... அங்கதான் போறோம்...''

அவன் பாமரத்தனமாய்ச் சொல்லிக் கொண்டே நடந்தான்.

எனக்கு ஆச்சரியமாய் இருந்தது.

நகை காணாமல் போனால் போலீசுக்கல்லவா போக வேண்டும்? பஞ்சாயத்தைக் கூட்டிப் பேசினால் நகை கிடைத்து விடுமா?

அரச மரத்தடியில் இருந்த மேடையின் முன்பு அந்தக் கிராமமே உட்கார்ந்திருந்தது.

நான் கூட்டத்தை விட்டுச் சற்று ஒதுங்கி ஓர் ஓரமாய் நின்று கொண்டேன்.

கனத்த மௌனம் எங்கும் பரவிக் கிடக்க மேடையின் மீது நடு நாயகமாய் உட்கார்ந்திருந்த ஊர்ப் பெரியவர் தீர்த்தகிரி கவுண்டர் தம் நரையோடிய புஸ்தி மீசையை இடது கை விரல்களால் ஒதுக்கிக்கொண்டே வெண்கலக் குரலில் பேச ஆரம்பித்தார்.

''பண்ணையார் வூட்டு நகை காணாமப் போயி இன்னியோட நாள் பத்தாவுது... முந்தாநாளு கூட்டம் போட்டுப் பேசினப்ப 'எடுத்தவங்க யாரா யிருந்தாலும் ஊர்க் கோடியில் இருக்கிற பிடாரி அம்மன் கோயில் உண்டியல்ல நகையைப் போட்டுடுங்க... இல்லேன்னு 'மொளகாய்ச் சாத்து' சாத்த வேண்டியிருக்கும்னு சொன்னேன். — அப்படி நான் சொன்னபின்னாடியும் உண்டியல்ல இந்த நிமிஷம் வரைக்கும் நகை விழல்ல... அதனால 'மொளகாய்ச் சாத்து' நடத்தறதைத் தவிர வேற வழியில்லே...!''

கூட்டத்தில் கசமுசவென்று ஒழுங்கற்ற சத்தம் ஆரம்பித்தது.

'அதென்ன மொளகாச் சாத்து?'

புரியாமல் குழம்பிப் போய் அருகில் நின்றிருந்த ஒரு பெரியவரிடம் கேட்டேன்.

அவர் சிரித்தார் மெல்ல. ''வாத்தியார் தம்பி கிராமத்துக்குப் புதுசு. அதனாலத் தான் மொளகாய்ச் சாத்துன்னா என்னன்னு தெரியல. சொல்றேன் கேட்டுக்க தம்பி! மொளகாய்ச் சாத்துன்னா ரெண்டு படி பச்சை மொளகாயை விழுதாட்டம் அரைச்சு அதை ஊர்க் கோடியில இருக்கிற பிடாரி அம்மனுக்குச்சொதுசொதன்னு பூசிட்டு வந்துடுவாங்க. பூசிட்டு வந்த பன்னிரண்டு மணி நேரத்துக்குள்ளாற நகையைத் திருடினவனுக்கு உடம்பெல்லாம் தீ வைச்ச மாதிரி 'திகு திகு'ன்னு எரியும். கீழே விழுந்து புரளுவான். அப்ப நகையை எடுத்தவன் அவன் தான்னு ஊர்ஜிதமாயிடும்...''

அந்தப் பெரியவர் சொல்லச் சொல்ல 'இப்படியும் நடக்குமா?' என்கிற ஆச்சரியம் என்னுள் பெருகியது.



மறுநாள் காலை ஏழு மணி.

தெருவில் உடுக்கை அடிக்கப்படும் சத்தம் கேட்டு வெளியே வந்தேன்.

பச்சைப்பசேல் என்ற மிளகாயை முறத்தில் நிரப்பிக் கொண்டு பண்ணையார் வீட்டு ஆள் ஒருவன் தலையின் மேல் வைத்துக் கொண்டு நடக்க — பின்னே பண்ணையாரும் ஊர்ப் பெரியவரும் உதிரியாகச் சில ஜனங்களும் நடந்தார்கள்.

நானும் பின்தொடர்ந்தேன்.

அரை மணி நேரத்துக்குப் பிறகு—

வேலிக்காத்தான் முட்செடிகள் சுற்றிலும் பரவி நிற்க — அந்தப் பிடாரியம்மன் கோவிலுக்கு முன்பாக எல்லோரும் குழுமினார்கள்.

''உம்... சாத்தை ஆரம்பியுங்க!'' — பண்ணையார் சொல்ல

கோவிலின் முன்புறமாய் இருந்த நான்கடி சதுர அம்மிக் கல்லில் முறத்திலிருந்த மிளகாய் பூராவும் கொட்டப்பட்டது. நான்கு பண்ணைப் பெண்கள் அம்மிக் கல்லில் குழவியைப் பக்கத்துக்கு இருவராய்ப் பிடித்துக்கொண்டு தண்ணீர் ஊற்றி அரைக்க ஆரம்பித்தனர்.

இருபதே நிமிடம்!

மிளகாய் வெண்ணெய்ப் பதத்துக்கு மாறியது. மிளகாயின் காரமான நெடி காற்றில் பரவி அங்கிருந்தோரின் மூக்கில் சுறுசுறு வென்று புகுந்தது.

''உம்... சாத்துங்க அம்மனுக்கு!'' என்று ஊர்ப் பெரியவர் கட்டளையிட்டார்.

பிடாரி அம்மனின் சிலைமேல் இருந்த அந்தத் துணியை அகற்றிவிட்டு மிளகாய் விழுதைக் கை நிறைய எடுத்துச்சாத்த ஆரம்பித்தனர். சில நிமிஷங்களில் அம்மனின் கரிய சிலை பச்சை நிறத்துக்கு மாறியது.

பூசாரி விபூதித் தட்டில் கற்பூரக் கட்டியை ஏற்றி ஆராதித்தார்.

''அம்மா! தாயே... உனக்குச் சாத்தியிருக்கிற இந்த மொளகாயோட கார நெருப்பு நகையை எடுத்தவனைச் சுடட்டும்... பன்னிரண்டு மணிநேரத்துக்குள்ளாற அவனை அடையாளம் காட்டிக் குடும்மா...!''

பார்த்துக் கொண்டிருந்த எனக்குச் சிரிப்பு பொங்கியது.

கிளம்பினேன்.

கையில் உள்ள கடிகாரத்தைப் பார்த்தேன்.

'மொளகாய்ச் சாத்து' முடிந்து இந்த நிமிஷத்தோடு பன்னிரண்டு மணி நேரம் தாண்டி விட்டது. கிராமத்தில் யாருக்குமே உடம்பு எரிச்சல் எடுக்கவில்லை.

கிராமத்தின் புராதன கடைத் தெரு, தேரடி மைதானம், சந்து பொந்துகளில் ஜனங்கள் கூடிக் கூடிப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

''இத்தினி வருஷமா தவறாமே அடையாளம் காட்டி அற்புதம் செஞ்ச அந்தப் பிடாரி அம்மன் இன்னிக்கு ஊமையாயிட்டாளே!''

சிகரெட்டைப் புகைத்தபடி தள்ளி நின்றிருந்த நான் மனசுக்குள் சிரித்துக்கொண்டேன். 'நகையை எடுத்தவன் இந்நேரம் அதை வித்து வாய்க்குப் பிடிச்சதைச் சாப்பிட்டு ஏதாச்சும் ஒரு தியேட்டர்ல அதுவும் ஏ. ஸி. தியேட்டர்ல உட்கார்ந்துட்டுப் படம் பார்த்துட்டு இருப்பான். இந்த முட்டாள் ஜனங்க போலீசுக்குப் போய்த் தகவல் சொல்லாம....'

நான் இப்படி யோசித்துக் கொண்டிருந்த அதே நேரம்—

பண்ணையாரின் வில் வண்டி வேகமாய் வந்து அரச மரத்தடியில் நின்றது.

பண்ணையார் முகமெல்லாம் பொங்கின சிரிப்போடும், உடம்பெல்லாம் அப்பிக் கொண்ட ஆர்வத்தோடும் ஊர்ப் பெரியவரை அணுகினார்.

''கவுண்டரே! நகை கிடைச்சுட்டது!''

தீர்த்தகிரிக் கவுண்டர் விசுக்கென்று தலை உயர்த்தினார்.

''கிடைச்சுட்டதா? யார் எடுத்திருந்தாங்க?''

பண்ணையார் சட்டென்று தலையைக் குனிந்து கொண்டார்.

''யாரும் எடுக்கல்ல கவுண்டரே! நகையைக் கழற்றி பீரோவோட முதல் தட்டில வைக்கறதுக்குப் பதிலா ரெண்டாவது தட்டில இருந்த வெள்ளிச் சொம்பிலே போட்டுட்டா எம் மக. நகையைத் தேடினவங்க யாருமே சொம்புக்குள்ளார பாக்கலே. வீணா ஊர் பூரா அமளி ஆயிடுச்சு...''

கூடியிருந்த கூட்டம் நிம்மதிப் பெருமூச்சு விட்டபடியே கலைய ஆரம்பிக்க—

தீர்த்தகிரி கவுண்டர் தம் முகத்தில் பெருமிதம் மின்னச் சொல்லிக் கொண்டிருந்தார்:

''அதானே பார்த்தேன்... ஊர்ல யாருமே திருடாதபோது எவனுக்கு உடம்பு எரியும்? அம்மன் ஊமையாய் இருந்ததுக்குக் காரணம் இப்பல்ல புரியுது...''

நான் திகைத்துப் போய் நின்றிருந்தேன்!

---

திருடன் நெ. 1: நேற்று நாம ரெண்டு லட்ச ரூபாயில்ல கொள்ளையடிச்சுக்கிட்டு வந்தோம். பேப்பர்லே ஒரு லட்சந்தானே திருட்டு போச்சுன்னு போட்டிருக்காங்க?

திருடன் நெ. 2: மிச்சமெல்லாம் கறுப்புப்பண மாயிருந்திருக்கும்!

- கல்கத்தா 'மிக்கி'



# வட்டமேஜை

● எரிக்கும் வெய்யிலில் வியர்வை வழிந்தோடக் கடைக்காரரிடம் கல்கிக்குக் காசை நீட்டினேன். அப்பாடா... அட்டையில் குளிர்ச்சியான அயிட்டங்களைக் கண்டதும் என் உடலும் உள்ளமும் ஒருங்கே குளிர்ந்துவிட்டன.
கண்ணம்பாளையம் — வசீபா

● வெய்யில் காலத்தில் இளநீர், நுங்கு, கரும்புச் சாறு, கிர்ணி, முலாம்பழம், தர்பூசணி ஆகியவைகளை உபயோகப்படுத்துவதால் ஏற்படும் நன்மைகளை விளக்கியதுபோல் ஐஸ் வகைகளை அதிகமாக உபயோகப்படுத்துவதால் ஏற்படும் தீங்கைப் பற்றியும் குறிப்பிட்டிருந்தால் நன்றாக இருந்திருக்குமே?
விருத்தாசலம் — எஸ். இம்பி

● எழுத்தாளர் ஏகாம்பரம் தயாரித்துள்ள 'நேர்முகப் பேட்டித் துணைவன்' புத்தகம் இங்குள்ள புத்தகக் கடைகளில் கிடைப்பது இல்லை. ஏகாம்பரத்திடம் இதுவிஷயம் உடனே தெரிவித்து அனைத்துப் புத்தகக் கடைகளிலும் 'துணைவன்' கிடைக்க வழி செய்யவும்.
கோவை — துரை பால்ராஜ்

● அரசியல்வாதிகள் என்ற போர்வையில் பலர் நடத்தும் செப்படி வித்தைகளைக் கண்டு எங்கள் வயிறு ஏற்கனவே பற்றிக்கொண்டு எரிகிறது. இதில் நீர் வேறு சவான் நடத்தும் நாடகத்துக்கு ஓசி பாஸ் கொண்டு வந்து கொடுக்கிறீராக்கும்!
தூத்துக்குடி — எஸ். தேவதாஸ்

● ஒரு கட்சியின் கொள்கைகள், அதை நடைமுறைப்படுத்தும் விதங்களில் கருத்து வேற்றுமை ஏற்பட்டு வெளியேறினால் நிச்சயமாக அதில் தவறில்லை. ஆனால் தானே ஒரு கட்சியை உருவாக்கி, கொள்கைகள், கோட்பாடுகளையும் வகுத்துவிட்டு வெளியேறுவது பச்சைத் துரோகமாகும்.
மேட்டுப்பாளையம் — எம்.பி. ரத்தினகுமார்

● இந்த வார சிறுகதைகளில் "எங்கோ ஒரு எதிரி" "'பாதி' காப்பு", "ஆற்று வெள்ளங்கள்" மூன்றும் மும்மணிகளாகத் திகழ்ந்தன. அதிலும் 'பாதி'காப்பு — நம் நெஞ்சைப் 'பாதி'த்தே விட்டது!
வீரபாண்டி — வதிலை அன்புச்செல்வன்

● டாக்டர் என்பவர், அது அவருக்கு முதவிரவாக இருந்தாலும் கூட மனைவியைப் பொருட்படுத்தாமல் உயிருக்கு மன்றாடும் நோயாளிகளையே முதலில் கவனிக்க வேண்டும் என்ற சிறந்த கருத்தை மிக அழகாக, 'ஆற்று வெள்ளங்கள்' என்ற தம் சிறுகதையில் கூறியுள்ளார் ஜே. எஸ். ராகவன்.
சென்னை-5 — எஸ். வி. ராஜசேகர்

● தலைப்பை இறுதியில்தான் தந்திருக்கிறார் இளந்தேவன். ஆனால் மனத் தவிப்பைக் கண்ணீர் காவியம் முழுவதுமே காட்டிறார்.
சென்னை-44 — பத்மா சேஷாத்ரி

● பெண்ணின் வாழ்க்கை, பாக்கு வெத்திலை, கன்னித் தீவு போன்ற படங்களை விமர்சனம் செய்தவர்களுக்கு இரக்க குணம் அதிகம் என்று நினைக்கிறேன். இல்லாவிட்டால் அவற்றைப் படங்களாக மதித்து விமர்சனம் செய்திருப்பார்களா?
திண்டி — நா. ரஜினி ராமச்சந்தர்



கருத்துப்படம்: ஆ. கிருஷ்ணசாமி

● எல்லாத் திரைப்பட விமர்சனங்களையும் ஒரே இதழில் வெளியிட்டு எங்களைக் காப்பதில் உங்களின் 'நல்லெண்ணம்' நன்றாகவே புரிகிறது.
சென்னை-4 — மயிலை கோபி

● பெண்ணின் வாழ்க்கை திரைப்பட விமரிசனத்தில் மொத்தம் மூன்று பெண்களின் வாழ்க்கை கதையில் அடிபடுகிறது என்று நளினி சாஸ்திரி கூறியுள்ளார். விமர்சனத்தில் ரத்தி, அருணா ஆகியோரின் நடிப்பை விமர்சனம் செய்துவிட்டு சுமதியின் நடிப்பை விமர்சனம் செய்யாதது வேதனைக்குரியது.
சிவகாசி — கே. ராகவன்

● படம் ஆடி ஓடிப் பெட்டிக்குள் அடங்கிவிட்ட இந்த நேரத்தில் (கன்னித் தீவு) விமர்சனம் செய்திருப்பதைநினைக்கும்போது உங்க சுறுசுறுப்பைப் பாராட்டாமல் இருக்க முடியவில்லை.
நத்தமேடு — என். ஜி. செயப்பிரகாசம்

● எம். ஜி. ஆர். ஆட்சியைத் திறனாய்வு செய்து அவரவர் பாணியில் வரைந்திருக்கும் கார்ட்டூன்களும், அவைகளுக்கு விளக்கமும் பாராட்டும்படி அமைந்திருந்தன. கார்ட்டூனிஸ்டுகள் ஆறு பேர்களின் புகைப்படங்களையும் வெளியிட்டிருந்தால் என்ன குறைந்தா போய் விடுவீர்கள்?
ஈரோடு-10 — மேஜர் தாசன்

● "ஐயா! அசல் கருணாநிதி மாதிரியே ஆகிட்டேனே!" என்று எம். ஜி. ஆர். கூறுவதாகக் கார்ட்டூன். "நேற்று ஒரு கொள்கை, இன்று ஒரு திட்டம், நாளை ஒரு செயல்" என்று நிலையற்றவரைப் போய், அரசியல் சாணக்கியர், அஞ்சா நெஞ்சரான கலைஞருக்கு இணை சொல்லியுள்ளீர்களே!
திண்டுக்கல் — எம். பொரோஸ்கான் நூன்

● திரு ரா.கியின் கார்ட்டூனில் குறிப்பிட்டிருந்த ஊழல் என்ற துண்டை அணிந்து கொள்ள வேண்டிய அவசியம் தமிழக முதல்வருக்கு என்றுமே இருந்ததில்லை.
போடிநாயக்கனூர் — எஸ். சையது முகமது

# கூட்டில் விழுந்த மழை•••

ஹர்ஷன் படித்தவன் – அலுவலகத்தில் பெரிய பதவி வகிப்பவன். ஆனாலும், வீட்டு நிர்வாகத்தைப் பொறுத்த மட்டில் பொறுப்பில்லாத பிள்ளையாகவே இருந்து வந்திருக்கிறான்.

வீடு என்பது ஒரு தங்குமிடம் போலவும், அம்மா அதைக் கட்டிக் காக்கக் கடமைப் பட்டவள் எனவும், சமீப காலமாக உறவு என்ற உரிமையில் வீட்டினுள் புகுந்துவிட்ட மாதங்கி ஒரு உயர்மட்டத்து வேலைக்காரி என்றும் நினைத்து அசட்டையாக இருந்து விட்டவன்.

வாழ்வில் தனக்கு ஏற்பட்ட தோல்விகளையே சதா எண்ணி, தன் சொந்தத் துயரத்திலேயே கரைந்து கொண்டு, சுயநலம் பாராட்டி, ஒரு வட்டத்தினுள்ளேயே வாழ்ந்து பழகிவிட்டவன்.

இப்போது, எங்கிருந்தோ, திடீரென ஒரு புத்துணர்ச்சி, பொறுப்பு உணர்வு விழித்துக் கொண்டு விட்டது அவனிடம்.

இனி காலத்தை ஒரு கணமும் விரயம் செய்யக் கூடாது என அவன் உள் மனம் உந்தியது. பரபரப்புடன் பொழுது புலரு முன்பே, தன் காரிலேயே பெங்களூருக்குப் புறப்பட்டு விட்டான்.

பெங்களூருக்கு வரும்போ தெல்லாம் ஹோட்டல் அம்சாவில்தான் அவன் தங்குவது வழக்கம். அங்கேயே தங்குவதற்கு முன்ஏற்பாடு செய்து விட்டே புறப்பட்டிருந்தானகையால், நேரே ஹோட்டலை அடைந்தான்.

பயணக் களைப்புத் தீரக் குளித்து வேறு உடுத்திக் கொண்டு மாடியிலிருந்த தனது அறையினின்றும் கீழே இறங்கி வந்தான். அதற்குள் காலை மணி பதினொன்று ஆகி விட்டிருந்தது.

அவசரக் காரியமாக வெளியூருக்கு இரண்டு நாள் போக வேண்டியிருப்பதால் அம்மாவை அவன் வரும் வரை கவனமாகப் பார்த்துக்கொள்ளும்படி மருத்துவமனை மேட்ரனிடம் பல முறைகள் இளிப் பிள்ளையைப் போலச் சொல்லிவிட்டுத்தான் கிளம்பி இருந்தான். டாக்டர் சொமணியிடமும் கூறிவிட்டே புறப்பட்டான். இருந்தாலும் அவனைப் பலவிதமான கவலைகள் அச்சுறுத்தின.

அம்மா உடம்பு நன்றாகத் தேறி வந்து கொண்டிருக்கிறது. திடீரென ஏதாவது கோளாறு நேர்ந்து விட்டால்....?

வீட்டை வேலைக்காரி வசம் ஒப்படைத்து விட்டு வந்திருக்கிறோமே? அவள் சரிவரக் கவனிக்காவிட்டால்?...

அவனும் வீட்டில் இல்லாதபோது ரோவர் சாப்பிட மறுத்துப் பட்டினி கிடந்தால்....?

சங்கிலித் தொடராக ஆயிரம் கவலைகள் அவன் மனத்தைக் குடைந்தன.

பகல் உணவு நேரம் நெருங்கி வரும் சமயம். நர்மதா அம்மாவின் வீட்டுக்குப் போய் வேண்டாத விருந்தாளியாக அவர்களுடன் சாப்பாட்டில் கலந்து கொள்ள அவன் விரும்பவில்லை.

நேரத்தை வீணாக்காது, உடனடியாகக் காரில் அல்சூர் சாலையை நோக்கி விரைந்தான்.

நர்மதா அம்மாளை அவன் சந்தித்துக் கொஞ்ச காலம் ஆகியிருந்தது. வீட்டை நெருங்கியதும் ஏனோ அவனுள் சிறு அச்சம் தலை தூக்கியது.

அவன் அம்மாவுக்கு நர்மதா மிக நெருங்கிய சிநேகிதிதான். ஆனால், பேச்சிலும்,






செயலிலும் மிகவும் கண்டிப்புக்காரி. அவள் போதனையால் மாதங்கியின் மனம் ஒரேயடியாக மாறி விட்டிருந்தால்?...

அவனுக்கு எத்தகைய வரவேற்பு கிடைக்குமோ? காரை நிறுத்திவிட்டு இறங்கிக் கேட்டைத் திறந்து கொண்டு வண்டியை மெல்ல நடைபாதை மீது ஓட்டி, வீட்டுக்கு முன்னால் கொண்டு நிறுத்தினான்.

மெல்ல இறங்கி, வராந்தாவைக் கடந்து அழைப்பு மணியை அழுத்துவதற்குள் அவனுக்கு நெஞ்சு உலர்ந்து போயிற்று.

நர்மதா அம்மாள்தான் கதவைத் திறந்தாள்.

''ஹர்ஷன்! என்ன ஆச்சரியம்? உன்னைப் பத்தி இப்பத்தான் நினைச்சிட்டு இருந்தேன். ஆயுசு நூறு உனக்கு... வாப்பா வந்து உட்கார்!'' அன்பாக அழைத்தாள்.

முன் அறையில் உட்கார்ந்தவன் அவள் தந்த குளிர் பானத்தைக் குடித்துவிட்டுச் சட்டெனப் பேச முடியாமல் சுற்று முற்றும் கண்களால் துழாவினான்.

''முந்தாநாள் ராத்திரி நீ டெலிபோன் செய்தப்போ நான் தூங்கிவிட்டிருந்தேன். மாதங்கி சொன்னாள்....'' நர்மதா மெல்லச் சிரித்தாள். வெட்கத்தில் முகம் சிவக்க நெஞ்சு படபடக்க ஹர்ஷன் உட்கார்ந்திருந்தான்.

''நீ வருவேன்னு எனக்கு அப்பவே தெரியும்!'' கேலியா — குத்தலா இனம் தெரியாத குரலில் அவள் சொன்னதைக் கேட்டுப் பதில் பேசத் தோணாது மௌனமாக விழித்தான்.

''மாதங்கி வேலை விஷயமா ஒரு இண்டர்வியூவுக்குப் போயிருக்கிறாள். காலைல போனவ சாப்பாட்டுக்குக்கூட இங்கே வரமாட்டா''! —ஹர்ஷனை மேலும் கீழுமாகப் பார்த்தாள் நர்மதா. அவள் கண்களில் லேசாகக் கடுமை மின்னுவதை அவன் உணர்ந்தான்.

''நான் நடத்துகிற ரெடிமேட் ஆடைக் கடையில் அவதான் உதவி செய்யறா. அதைக் கவனிக்க அப்படியே நேரே போயிடுவா.''

ஹர்ஷனுக்கு நாவறண்டு பேச முடியாது உணர்வுகள் நெஞ்சை அடைத்துக் கொண்டன. மாதங்கி எப்போ வருவாள்? — கேட்கத் துணிவில்லாது குழம்பினான்.

''அநேகமாக இந்த வேலை மாதங்கிக்குக் கிடைச்சுடும். பிறகு அவ தன்னைத் தானே காப்பாத்திக் கொள்ளக் கூடிய சுதந்திரமான பெண்ணாகி விடுவாள். பிறகு யாரோட தயவும் அவளுக்குத் தேவை இருக்காது.'' நர்மதாவின் வார்த்தைகளின் கூர்மை அவனைத் தாக்கியது.

தவறு செய்துவிட்டு ஆசிரியர் முன் தண்டனை பெறக் கைகட்டி வாய் புதைத்து



அச்சத்தில் நிற்கும் பள்ளிச் சிறுவனைப் போல் உடல் கூசி உட்கார்ந்திருந்தான் ஹர்ஷன்.

''பகல் பன்னிரண்டு மணிக்கு மேலே, கடையில் அதிகமான கூட்டம் இருக்கும். வாடிக்கைக்காரங்களை விட்டுவிட்டு மாதங்கி கடையிலிருந்து வெளியே வர முடியாது. நாலு மணிக்கு நான் கடைக்கு வருவேன். அப்போ அவளுக்கு ஓய்வு கிடைக்கும். உன்னோட வெளியே வந்து பேச முடியும்... அது வரையில் நீ வேணுமானால் இங்கயே இருந்திட்டு... என்னோட சாப்பிட்டுட்டு...'' அவள் முடிக்கு முன் ஹர்ஷன் வேகமாக விடைபெற்றுக் கொண்டான்.

நர்மதா அம்மாள் மீது எரிச்சல் படுவதால் என்ன லாபம்? அவள் ''வேண்டாம்'' என்று அடித்து விரட்டியபோது, அடைக்கலம் கொடுத்து ஆதரித்தது அந்தம்மாளல்லவா? அந்த உரிமையில் பேசுகிறாள். இதில் என்ன தவறு? தும்பை விட்டு வாலைப் பிடிக்க நினைத்தால்.... இப்படித்தான் அவமானமும், சங்கடமும் ஏற்படும்....தன்னையே நொந்தபடி புறப்பட்டான்.

''நர்மதா பொட்டீக்'' கடை வாயிலில் எதிர்ப்புறம் கொஞ்ச தூரத்திலேயே காரை நிறுத்திவிட்டுக் கண்களை உள்ளே ஓட்டியபடி உட்கார்ந்திருந்தான்.

பகல் வேளை... ''பொட்டீக்''கில் இளசுகளின் கூட்டம் நிறையவே இருந்தது. காரில் இருந்தபடியே கடை முகப்பின் பெரிய கண்ணாடிக் கதவு வழியே ஊடுருவியபடி மாதங்கியைத் தேடினான்.

ஒரு இளம் பெண்ணுக்கு அலமாரியில் இருந்த 'மாக்ஸி'களை எடுத்துக் காட்டியபடி விற்பனை மும்முரத்தில் இருந்தாள் அவள். அந்த இளம் பெண் அருகே அவளையொத்த ஒரு இளைஞன் துணையாக நின்றவன் மாதங்கியிடம் விழுந்தடித்துக் கொண்டு பேச முற்பட்டுக் கொண்டிருந்தான்.

என்ன சொன்னாளோ அவள்... கடையே அதிரும்போல அந்த இளைஞன் சிரித்தான்.

மாதங்கி மேலே இடித்துக் கொண்டுவிடும் நெருக்கத்தில் என்னவோ கேட்டுக் கொண்டிருந்தான். ஹர்ஷனுக்கு எரிச்சலாக வந்தது. அழகான பெண் ஒருத்தியைக் கண்டால் போதும். என்னமாய்ப் பல்லை இளிக்கிறான்கள்... தானும் இப்படி இருந்தவன் தான் என்பதும், ஒரு காலத்தில் கண்ணுக்குக் கவர்ச்சியான பெண்களின் பின்னால் ஓடினவன் என்பதும் அவனுக்கு மறந்தே போய் விட்டிருந்தது.

மாதங்கியும் புன்னகை மாறாத முகத்துடன் பதில் அளித்தபடி இருந்தது வேறு அவனுக்குள் புகைச்சலைக் கிளப்பி விட்டது. சதா மிரட்சியுடன் காணப்படும் அவள்கூடவல்லவா, இப்பொழுது தைரியமாகப் புன்முறுவலுடன் தலையை ஆட்டி ஏதோ பேசுகிறாள்! அவளும் மாறிப் போயிருக்கலாம்!

இத்தனை நாட்களின் இடைவெளியில் அவன்மீது ஒரு வெறுப்பு ஏற்பட்டு விட்டிருக்கலாமே? அவளை வீட்டை விட்டு வெளியே துரத்த அவனுக்கு நெஞ்சுரம் இருந்ததுபோல் அவளுக்கும் அவனை நிராகரிக்க இப்போது, உறுதியும் துணிவும் ஏற்பட்டிருக்கலாமே?

மாதங்கி இப்போது வெளி உலகில் பழகி விட்ட பெண். நர்மதா அம்மா சொன்னது போல் தன் சுய முயற்சியாலேயே தனித்து வாழும் தகுதி பெற்று விட்டவள். இனி அவனது தயவுக்காகவோ, அன்புக்காகவோ ஏங்கி, அடிமை வாழ்வு வாழத் தேவையில்லை அவளுக்கு.

பெண் உரிமை, சுதந்திரம் என்று பேசி வரும் அவனது அம்மாவும், மாதங்கியின் மனப்போக்குப்படிதான் பேசுவாள். எனவே, மாதங்கி அவனை உதாசீனம் செய்தாலும், வெறுத்துப் பேசினாலும் அவனுக்காகப் பரிந்து பேச யாருமே முன்வர மாட்டார்கள்.

ஹர்ஷன் மீண்டும் கண்ணாடிக் கதவின் வழியே ஊடுருவிப் பார்த்தான். மாதங்கி, அந்த வாலிபனிடம் சிரித்துப் பேசியது, அடக்க மாட்டாத ஆத்திரத்தைத் தூண்டியது. பற்களைக் கடித்துக்கொண்டு, பொறுமையுடன் காத்திருந்தான்.



## ஏ, மழலையே..!

அமுதமே!
இரவில் எழுதிய சிறுகதைகளின்
கருவில் உருவான தொடர்கதையே!
பொன்மணியே!
பூச்சரமே!
நடைபயிலும் பொன் ரதமே!
பல்லில்லா உன் இதழசையும்
சொல் கேட்டால்
மலைகளும் மழலைகளாய் மாறும்...
சீறும் கடலலையும் சிரிக்கும்.
உச்சி மோந்து
உன்னை அள்ளி அணைக்கையில்
ரோஜா இதழில்
பனிமுத்து பதிக்கின்ற ஸ்பரிசம்.
மழலை மரிக்கொழுந்தே!
கொஞ்சிக் குலாவையில்
நெஞ்சில் நீ
உதைப்பது இதமாக இருக்கிறது.
என்னை உதைப்பதைப் போல
எல்லோரையும் உதைக்காதே!
உன் கால் முறிந்துவிடும்.
என்ன வியக்கிறாய்?
பலருக்கு அங்கே
இதயத்துக்குப் பதிலாக
இரும்பல்லவோ இருக்கிறது?

— இனியபாரதி

புகைப்படம்: என்.பக்கிரிசாமி



கணக்கில் நிபுணான கல்லூரி மாணவன் ஒருவன் கவியரசர் தாகூரைப் பார்க்க வந்திருந்தான்.

''தம்பி! உன்னிடம் ஒரு ரூபாய் இருக்கிறது. என்னிடம் ஒரு ரூபாய் இருக்கிறது. நாம் இருவரும் பரிமாறிக் கொண்டால் இருவரிடமும் அதே தொகைதானே இருக்கும்?'' என்று கேட்டார் தாகூர்.

''ஆமாம்'' என்றான் மாணவன்.

''உன் மனத்தில் ஓர் எண்ணம் இருக்கிறது. என் மனத்திலும் ஓர் எண்ணம் இருக்கிறது. நாம் இருவரும் ஒருவருக்கொருவர் எண்ணங்களைப் பரிமாற்றிக் கொண்டால், நம் இருவர் மனத்தில் இரண்டு எண்ணங்கள் இருக்கும்; இல்லையா?'' என்றார், தாகூர்.

கணித நிபுணன் அசந்து போய்விட்டான்!

'கல்கத்தா மிக்கி'

ஆதாரம் : மகாகவிகள்

---

அவளுக்குச் செய்த கொடுமையை அவன்தானே சீர் செய்தாக வேண்டும். பொறுமை! பொறுமை! மனம் எச்சரித்தது.

சிறிது பொழுதில் நர்மதா அம்மாவின் காரைக் கண்டதும் இலேசாக மூச்சு வந்தது அவனுக்கு.

காரை நிதானமாக ஒரு புறம் நிறுத்தியவள், அவனிடம் வந்து, ''நான்போய் மாதங்கியை அனுப்புகிறேன். எங்கேயாவது ஒரு தனி இடத்தில் உட்கார்ந்து கொண்டு நீ பேசிக்கொள்'' என்றாள் கண்டிப்புத் தொனிக்கும் குரலில்.

'கடை வாயிலில் ஏதேனும் ரசாபாசமாகப் பேசிவிடாதே' என்ற பொருள் தொனித்தது அவள் குரலில்.

ஹர்ஷன் கோபத்தைச் சிரமத்துடன் அடக்கியபடி தலையை ஆட்டி வைத்தான்.

''நீ பேசறதைப் பேசிக்கொள். பிறகு அவள் இஷ்டம்''. நறுக்கெனக் கூறிவிட்டு, கடைக்குள் சென்றுவிட்டாள்.

ஒரு விநாடியே ஒரு யுகமாகக் கனத்தது. நெஞ்சு படபடக்க ஆவலுடன் கடையையே வெறித்தபடி இருந்தான்.

மாதங்கி, 'போனை'த் துண்டித்தது போல் அவனைப் பார்க்க மறுத்துவிடுவாளோ?– அவன் நேரே ஊரிலிருந்து வரக் கூடும் என்று எதிர்பார்த்து, இண்டர்வியூவைச் சாக்காக வைத்து வீட்டிலிருந்து வெளியேறி விட்டாளோ?

மாதங்கி கண்ணாடிக் கதவைத் தள்ளிக் கொண்டு வெளியே வந்தாள். எதிர்ப்புறமாக நிறுத்தப்பட்டிருந்த அவனது காரைக் கண்டதும் தயக்கத்துடன் அப்படியே நின்றுவிட்டாள்.

''மாதங்கி!'' — உரக்கக் கூவி அழைக்க வேண்டும்போல் அவனுக்குள்ளே ஆவேசம் அலையாகப் பொங்கியது. அதே சமயம், ஒருவிதமான வெட்கமும், அவமானமும் அவனை அடக்கின. கையை மட்டும் உயரத் தூக்கி, தான் நிற்கும் இடத்தைக் காட்டுவது போல் அசைத்தான்.

மாதங்கி அதைப் பார்த்தது தெரிந்தது. ஆனால் நின்று கொண்டே இருந்தாள். அதற்கு மேல் ஹர்ஷனால் பொறுக்க முடியவில்லை.

சட்டெனக் காரை விட்டு இறங்கினான். ஒரே தாவலில் எதிர்ப் பக்கம் நின்ற அவளருகில் ஓடி மூச்சிரைக்க நின்றான்.

''மாதங்கி! உன்கிட்ட நேராகப் பேச வேண்டும் என்று ஓடோடி வந்திருக்கேன்.''

மாதங்கி மெல்ல அவனைப் பார்த்தாள். முன்போல் அவனைக் கண்டதும் அவளது கண்களில் காணப்படும் மிரட்சி அவளிடம் இல்லை.

''அம்மாவுக்கு ரொம்பவும் உடம்புக்கு முடியலே. நர்ஸிங் ஹோமில சேர்த்திருக்கு... அதனாலே காரை எடுத்துக்கிட்டே சென்னையிலிருந்து ஓடோடி வந்தேன்.'' அவசரமாக முடித்தான்.

''தெரியும். நர்மதா அம்மா சொன்னாங்க'' அவளது குரலில் எந்தவிதமான சலனமும் இல்லை. இதுநாள் காணாத கணவனைக் கண்ட மகிழ்ச்சி, பரபரப்பு ஊஹூம்! எதுவுமே இல்லாத விருப்பு வெறுப்பற்ற குரல்!

ஹர்ஷனின் முகம் அவமானத்தால் சிவந்தது. இத்தனைக்கும் அவன்தானே காரணம்? தன்னையே சாடியபடி, ''என்னோட கொஞ்சம் வெளியே வரமுடியுமா மாதங்கி?'' என்றான் தடுமாற்றத்துடன்.

''எங்கிட்டப் பேசப் போறீங்களா?''

''மாதங்கி! ப்ளீஸ்!'' ஹர்ஷன் கெஞ்சினான்.

''ஒண்ணு செய்யலாமே. நாம ரெண்டு பேர் சம்பந்தப்பட்ட விஷயம். அதைப்பத்திப் பேசணும்னு நர்மதா அம்மா வீட்டுத் தோட்டத்திலேயே அமர்ந்து பேசுவோமே'' என்றாள் தீர்மானத்துடன்.

''அப்ப புறப்படலாமா?''

''இல்லே. நீங்க புறப்பட்டுப் போங்க. நான் நர்மதா அம்மாவிடம் சொல்லிட்டு அங்கேயே வந்து சேருகிறேன்.'' — கடை உள்ளே மறைந்துவிட்டாள் மாதங்கி.

ஹர்ஷனின் முகம் ஏமாற்றத்தால் தொங்கிப் போயிற்று. காரில் ஏறி அமர்ந்தவனுக்கு நெடு நேரம் தெருவே சூன்யமாகக் காட்சி அளித்தது. அவனது மனக் கோட்டை தொறுங்குவது போன்ற பிரமிப்பில் அமர்ந்து போனான்.

(தொடரும்)

# கடிதம்

## ரசிகமணி





இன்று தமிழ்நாட்டில் கடித இலக்கியம் ஒரு புதிய கலையாகப் பரவத் தொடங்கியிருக்கிறது. மேனாடுகளில் கடிதங்களைத் தொகுத்து இலக்கியமாகவே வெளியிடுகிற மரபு வளமாக இருந்து வருகிறது. இப்போது தமிழ் நாட்டிலும் இது தொடங்கியிருப்பது ஒரு நல்ல அறிகுறியாகும்.

கடித இலக்கியத்தில் தமிழ் மொழியில் நல்ல ஒரு முன்னோடியாக விளங்குவது டி.கே.சி. கடிதங்களின் தொகுப்பாகும்.

அண்மையில் நண்பர் நீதிபதி மகராஜன் அவர்கள், தமக்கும் தமது தமக்கையாருக்கும் டி.கே.சி. எழுதிய கடிதங்களில் பலவற்றைத் தொகுத்து ஓர் அழகிய நூலாக வெளியிட்டிருக்கிறார். இது போலவே என் நண்பர் காலஞ்சென்ற தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான், ஐ.ஏ.எஸ். அவர்களும் ஒரு தொகுப்பு வெளியிட்டிருக்கிறார்—'ரசிகமணி டி.கே.சி.யின் கடிதங்கள்' என்ற தலைப்பிலே! இந்த நூல் 1961ல் வெளியாயிற்று.

இந்த இரண்டு தொகுப்புக்களையும் படித்துப் பார்த்தால் இலக்கிய நூல்களைப் படிப்பது போலவே இருக்கும். ஒவ்வொரு கடிதமும் ஒரு அழகான கட்டுரை! உல்லாசம், களிப்பு, செண்டை, இலக்கிய உண்மைகள் சில நுட்பங்கள் எல்லாம் ஒவ்வொரு கடிதத்திலும் துலாம்பரமாகப் பேசும்!

கடிதத்தின் பொருள் பலப் பலவாக இருக்கும். சாதாரணச் செய்தி என்று தோன்றுகிற ஒன்றுமே டி.கே.சி.யின் தமிழில் தங்க முலாம் பெற்று நிற்கும்!

பம்பாயிலிருந்து ஏ.கே. கோபால பிள்ளை (கேரள நண்பர்) என்ற நெல்லை வழக்கறிஞருக்கு எழுதியுள்ளார் டி.கே.சி. சாதாரணச் செய்திகளும் ரசிகமணியின் கையிலே எப்படிப் பேசுகின்றன பாருங்கள்!

"பம்பாயில் நான் இருப்பது அதிசயமாய் இருக்கலாம் தங்களுக்கு. உண்மையில் அதிசயந்தான். நானாக இங்கு வரவில்லை!

ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மியின் கச்சேரி திருச்சியில் 20–10–46 அன்று நடந்தது. அதற்காக என்னை அழைத்தார்கள். நானும் போனேன். கச்சேரி முடிந்ததும் என்னை ரயிலில் தூக்கிப் போட்டார்கள் எம்.எஸ்.ஸும் சதாசிவமும்! மறுநாள் காலை ஏழு மணிக்குச் சென்னை சென்றோம். அப்படியே பத்து மணிக்கு ஆகாய விமானத்தில் தூக்கிப் போட்டார்கள். சாயங்காலம் நாலு மணிக்குப் பம்பாயில் இறக்கினார்கள். இதுதான் பம்பாய்க்கு வந்த கதை!

பம்பாய் நகரம் பார்க்க வேண்டிய நகரம் தான். சென்னைக்கும் இதற்கும் சம்பந்தமே இல்லை. மேல் நாட்டு நகரங்களைப் போல் வகுத்திருக்கிறது. பெருந் தொகையான ஜனங்களை எவ்வளவு சௌகரியப்படுத்தக் கூடுமோ, அவ்வளவு செய்திருக்கிறது! மனுஷன் கெட்டிக்காரப் பயல்தான் என்று சொல்லும்படியாக இருக்கிறது. மூன்று மாடி வீடுகளும் ஐந்து மாடி வீடுகளுமாகத்தான் இருக்கின்றன. ஒரு மாடியிலேயே மூன்று குடித்தனங்கள் இருக்கின்றன. நாங்கள் இருக்கிற மாடியின் பகுதி சிறிய பகுதிதான். ஆனாலும் பதினாறு நபர்கள் சௌகரியமாகப்

# எழுதும் கலை

## ரசித்த மணிகள்

### மீ.ப.சோமு



பொழுது போக்கிக் கொண்டிருக்கிறோம். அறைகளை அப்படிச் சாதுரியமாக அமைத் திருக்கிறது. ஆடவர் நாலு பேர், பெண்டுகள் ஐந்துபேர், வேலையாட்கள் நாலுபேர், குழந் தைகள் ஆறு — என்னோடும் சேர்த்து!

எல்லாக் குழந்தைகளையும் விட எனக்குத் தான் அதிகப் பாராட்டு! சில வேளைகளில் எதிர் வீட்டுக் குழந்தை, ஒன்பது மாசக் குழந்தை, எனக்குப் போட்டியாக வந்து விடுகிறது! அப்போது ஒருவரும் என்னைக் கவனிக்கிறது இல்லை! தயானந்த சரஸ்வதி என்று அந்தப் பயலுக்குப் பெயர் வைத்துக் கொண்டார்கள், அவனைக்கேட்காமலேதான்! அவனுக்கும் கண் என்னைப் போல் இரண்டு தான். கண் இரண்டுதானே என்றாலும் கண் எங்கே, கண் எங்கே என்று இருபதினாயிரம் தடவை கேட்கிறார்கள். அவனும் கண்ணைக் கண்ணாலேயே காட்டுவான், சிக்கென்று மூடித் திறந்துதான்! அப்படியே வாயைத் திறந்து வாயைக் காட்டுவான். மூக்கையும் ஒரு சுருக்குச் சுருக்கிக் காட்டிவிடுவான். எல் லாருக்கும் ஒரே சந்தோஷம். ஒரே ஆனந்த வெறி. எல்லாரும் சேர்ந்து வெறிகொண்டு அடிக்கிற கும்மாளியைப் பார்த்தால்தான்

தாய்ப்பூ தாமரைப்பூ
தங்கத்து வீட்டு
செண்பகப் பூ

என்ற பாட்டில் எவ்வளவு உண்மையும் அழ கும் இருக்கின்றன என்று தெரியவரும்.

Hero worship என்றைக்கும் உலகத்தை விட்டுப் போய்விடாது என்று கார்லைல் ஆசிரி யருக்குக் கையடித்துக் (சத்தியம் செய்து) கொடுக்கலாம்.

எனக்கு எப்படிப் பொழுது போய்க்கொண் டிருக்கிறது மூன்றாவது மாடியில் என்று தெரி கிறதல்லவா?''

இது ஒரு கடிதம். இது போலவே மிகப் பெரிய தத்துவக் கவிதைகளும் கடிதத்திலே வந்து போகும். இன்னொரு கடிதத்தைப் பாருங்கள். காரைக்கால் அம்மையாரின் அற்புதத் திருவந்தாதிப் பாடலை நினைவு கூர்கிறது கடிதம்:

அழலாட அங்கை
சிவந்ததோ, அங்கை
அழகால் அழல்சிவந்த
வாறோ — கழலாடப்
பேயாடு கானில்
பிறங்க அனலேந்தித்
தீயாடு வாய், இதனைச்
செப்பு!

ஏதோ நேருக்கு நேர் நின்று ''இதனைச் சொல்லு!'' என்று சொல்லுவது, கடவுள்த் தத்துவத்தில் அத்தனை நினைப்பு இருக்கிறது என்பதை அல்லவா காட்டுகிறது!

செந்நிறத்தைத் தீக்கு ஏற்றுவதில் ஒரு அரிய காதல் சுவையே கிடக்கிறது.

''Truth when perceived has a voluptuous appeal'' என்பதன் உண்மை, செய்யுளில் மிக்க வேகத்தோடு ஒளிவிட்டு வீசுகிறது!

# பாரதி கண்ட பாரத ஒருமைப்பாடு



தேச ஒருமைப்பாட்டைப் பாரதி போல் வலியுறுத்திய கவிஞர் வேறு எவருமில்லை. பாரதத்தைச் சேதப்படுத்த முடியாத ஒரே நாடாகக் கருதினாரென்றாலும், அதன் அரசியல் சமஷ்டியாக இருக்க வேண்டுமென்று எண்ணினர்.

இந்தியா மொழிவாரி அரசுகளை அங்கங்களாகக் கொண்ட பேரரசு நாடாக இருந்தால்தான் மொழிவழிப்பட்ட தேசிய இனங்களின் மொழி, கலாசாரம் ஆகியவற்றுக்குப் பாதுகாப்பு இருக்குமென்று நம்பினர். இதை, "தாயின் மணிக்கொடி பாரீர்!" என்று தொடங்கும் பாடலிலே மிகவும் தெள்ளத் தெளியத் தெரிவித்துள்ளார்.

இப்பாடல் சுதந்திர இந்தியாவிலே தேசியக் கொடிக்கு வணக்கம் செலுத்துவதைச் சித்திரிக்கிறது. வணங்குவது, சாதாரணக் குடிமக்களல்ல; தேசத்தின் இராணுவத்தார்! அந்த இராணுவமும் பல்வேறு அணிகளாகப் பிரிந்து தேசியக் கொடியின் கீழ் நிற்பதைக் காட்டுகிறார். அந்த அணி வேறுபாடு இந்தியாவின் மொழி வேறுபாட்டைக் கொண்டதாகும்.

செந்தமிழ் நாட்டுப் பொருநர், சேரன்தன் வீரர், சிந்தை துணிந்த தெலுங்கர், தாயின் சேவடிக்கே பணிசெய்திடு துளுவர் (கன்னடர்) போரில் காலனும் அஞ்சக்கலக்கும் மராட்டர், பொற்புடையார் இந்துஸ்தானத்து மல்லர் (இந்தி மொழிப் பிரதேசத்தார்) பஞ்சநதத்துப் பிறந்தோர் (பஞ்சாபியர்), துஞ்சும் பொழுதினுந் தாயின் பதத் தொண்டு நினைத்திடும் வங்கத்தினோர் என மொழி வேறுபட்ட இனங்களைச் சார்ந்த இராணுவ வீரர்கள் தனித் தனி அணியாக நிற்கின்றார்கள் என்று சொல்லிவிட்டு,

"அணியணி யாயவர்
நிற்கும் — இந்த
ஆரியக் காட்சியோர்
ஆனந்த மன்றோ!"

என்று இதய எழுச்சியோடு பாடியுள்ளார்.

'இராணுவத்தை மொழிவாரி அணியாகப் பிரித்தால் அந்த அணிகளைக் கொண்ட தேசிய ராணுவம் ஒருமைப்பாடுடையதாக இருக்குமா? ராணுவத்தினரிடையே மொழி வழி இன உணர்வை வளர்ப்பது நல்லதா? அத்தகைய ராணுவம் நம்பிக்கைக்குரியதாக இருக்குமா? — என்றெல்லாம் கேள்வி எழக் கூடும் என்று எதிர்பார்த்த பாரதியார்,

"நம்பற்குரியர் அவ்வீரர் — தங்கள்
நல்லுயிர் ஈந்தும் கொடியினைக் காப்பார்"

என்று பதிலளிக்கிறார்.

"பணிகள் பொருந்திய மார்பும் — விறற்
பைந்திருவோங்கும் வடிவமும் காணீர்"

என்றும் கூறுகின்றார்.

இராணுவத் தளபதிகள் தங்களிடையிலான அந்தஸ்து — அதிகார வேறுபாடுகளைக் குறிக்கும் பதக்கங்களை மார்பிலே அணிவது வழக்கம். இதைத்தான் "பணிகள் பொருந்திய மார்பும்" என்ற வாசகத்தில் பாரதி சொல்கிறார்.

இன்றைய நடைமுறை என்ன? ராணுவத்திலே மொழிவாரி யூனிட்டுகள் இருக்கின்றன. "பஞ்சாபி யூனிட்", "மெட்ராஸ் யூனிட்" என்று பல்வேறு யூனிட்டுகளாக இந்திய ராணுவம் வகுக்கப்பட்டு ஒரே தலைமையின் கீழ் வைக்கப்பட்டுள்ளன.

"வாழிய செந்தமிழ்" என்று தமிழை வாழ்த்திவிட்டு, "வாழ்க நற்றமிழர்" என்று தமிழினத்தையும் வாழ்த்துகிறார். பின்னர், "வாழிய பாரத மணித்திரு நாடு" என்று பாரதப் பெருநாட்டை வாழ்த்துகின்றார். தமிழ் நாட்டைத் தனியாகப்பிரித்தெடுத்து வாழ்த்தவில்லை. பாரதத்துடன் சேர்த்து வைத்தே வாழ்த்துகிறார். "பாப்பா பாட்டி"லேயும்,

"தமிழ்த் திருநாடு தன்னைப்
பெற்ற — எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா
அமிழ்தில் இனியதடி — பாப்பா — நம்
ஆன்றோர்கள் தேசமடி பாப்பா"

என்று வரும் வரிகளிலே, தமிழ் நாட்டைப் பெற்றெடுத்த தாய் நாடாகப் பாரதப் பெரு நாட்டைக் குறிப்பிடுகின்றார். இதிலே "எங்கள் தாய்" என்று பாரதி குறிப்பிடுவது பாரதத் தாயையேயாகும்.

தமிழ் வழங்கும் நிலப் பரப்புக்குத் தனி நாட்டுத் தன்மை உண்டு என்பதனையும் பாரதி மறக்கவோ, மறுக்கவோ இல்லை. தமிழ் நாடு, தமிழினத்தவரின் தாய்நாடு என்ற கொள்கையும் அவருக்கு உடன்பாடு தான். ஆம்; இந்தியாவின் ஒருமைப்பாட்டுக்குக் கேடில்லாத வகையிலே!

"சிங்களம் புட்பகம்
சாவக — மாதிய
தீவு பலவினுஞ்
சென்றேறி — அங்கு
தங்கள் புலிக்கொடி
மீன் கொடியும் நின்று
சால்புறக் கண்டவர்
தாய்நாடு"

இந்த வரிகளிலே தமிழகத்தைத் தமிழினத்தின் தாய்நாடாகவும் கருத இடம் உண்டு என்பதனைப் பாரதி ஏற்றுக் கொள்கிறார்.

பாரதியார் தமிழ் மொழியின் தனித் தன்மைக்கும், தமிழினத்தின் தன்னாட்சி உரிமைக்கும் கேடில்லாத வகையில்தான் இந்திய ஒருமைப்பாடு அமையும் என்று நம்பினர். அப்படித்தான் அமைய வேண்டும் என்றும் விரும்பினர்.

ம.பொ.சி

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course, Road, Guindy, Madras-600 032. (Phone: 431543) Editor: K. Rajendran

# மின்னலடிக்கும் ஸூப்பர் ரின் வெண்மை...

## ...இதர, டிட்டர்ஜெண்ட் வில்லை, பார் எதனையும் மிஞ்சும் வெண்மை.

பார்வைக்கு தப்பவே தப்பாத வெண்மை உங்கள் துணிகளுக்கு—வேலை தவறாத ஸூப்பர் ரின் சலவையின் வெண்மையே தனி.
இதர டிட்டர்ஜெண்ட் வில்லை, பார் எதனையும் மிஞ்சுவது ஸூப்பர் ரின் வெண்மை.
காரணம், மிகுந்த வெளுக்கும் சக்தி அடங்கியது ஸூப்பர் ரின்.

**நீங்களே கண்டுகொள்வீர்கள்**

இதை வெளுத்தது வேறுவித டிட்டர்ஜெண்ட பார்



இதை வெளுத்தது ஸூப்பர் ரின்




<u>அதிக</u>
வெளுப்பூட்டும் சக்தி படைத்தது
ஸூப்பர் ரின்.

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

லிண்டாஸ்-RIN.35-2012 TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

அம்மா உங்கள் கவனிப்பு கரை கடந்தது.




# உலகிலோர் ஒப்பிலா மணி யென அவளுக்கு உணர்த்திடும் அன்புறவே.



எல்லையற்றதம்மா உங்கள் இனிய கவனிப்பு... அவளுக்காக நீங்கள் தேர்ந்தெடுக்கும் பிஸ்கட்டே அதன் தாழுரைக்கட்டுமே. திண்ணம் அதுவே. தீவிர சுகாதார முறையில் கைபடாத் தூய்மையோடு தயாரித்த பிஸ்கட்—சுவை மிக்கது. கரகரப்பானது. அவளுடைய தேவைக்கு நிகரான ஊட்டச்சத்து உள்ளது. எண்ணிப் பாருங்கள். தரத்திற்காக 7. உலக விருதுகளை வென்ற பிஸ்கட்—பார்லே க்ளுகோ—இந்தியாவின் அதி நவீன பிஸ்கட் தயாரிப்பாளர்களின் படைப்பு.




இந்தியாவின் அதிக
விற்பனை கண்ட பிஸ்கட்

உலக விருதுகளை
வென்றது




க்ளுகோ

உங்கள் பாசத்தைப் பேசிடும் குழந்தை பராமரிப்பு பிஸ்கட்.

everest/80/PP/331-fm